

# தெய்வத்தின் நட்பு

கே.மதுராம்பாள்

**அவ்வை**

எண்.1 புதூர் 13-ஆவது தெரு
அசோக் நகர், சென்னை - 600 083
போன். 5568 8527 / 98416 21398

| | | |
|---|---|---|
| நூலின் தலைப்பு | : | தெய்வத்தின் நட்பு |
| நூலாசிரியர் | : | கே.மதுராம்பாள் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| ஆண்டு | : | டிசம்பர் 2006 |
| நூல் வகை | : | ஆன்மிகம் |
| பக்கங்கள் | : | 120 |
| நூல் அளவு | : | கிரவுன் |
| ஒளி அச்சு | : | குகன் கம்ப்யூட்டர்ஸ், சென்னை-78. |
| அச்சிட்டோர் | : | தேவா ஆப்செட், சென்னை. |
| **விலை** | **:** | **ரூ.30.00** |

வெளியீடு:

**அவ்வை**

எண்.1 புதூர் 13-ஆவது தெரு

அசோக் நகர், சென்னை - 600 083

 5568 8527 / 98416 21398



"இன்றிருந்து நாளைக்குள் மறைந்து போகும்

இச்சிறிய உடலினுள் புகுந்து கொண்டு

நின்றிருந்து பேசுகின்ற "நான் யார்?" என்று

நாளில் ஒருதரமேனும் நாடிப் பார்த்தால்

'என்றிருந்தோம், எங்கு வந்தோம்? எது நாம்?' எல்லாம்

எளிதாகக் கண்டுகொள்வாய் என்றே சொல்லிக்

குன்றிருந்த விளக்கேபோல் திசையைக் காட்டும்

குறிக்கோளம் ரமண மகா குருவின் வாழ்க்கை!

நாமக்கல் கவிஞர்

இராமலிங்கம் பிள்ளை

# பதிப்புரை

இந்த புனித மண்ணில் ஞானிகளாக அவதரித்த மகா மனிதர்களில் உலகளாவிய புகழ்பெற்றவர் ஸ்ரீரமண மகரிஷி ஆவார். அவர்தம் தவ வலிமையும், ஆற்றலும், கருணையும் பல்வேறு தேசத்தவரையும் ஈர்த்து அருள் பாலித்த அற்புதங்களை நாம் நிறைய அறிந்திருக்கிறோம்.

அவரைக் கண்டும் காணாமலும் அவர்பால் அன்பும் பக்தியும் கொண்டிருப்பவர்கள் உலகெங்கும் பரவிக் கிடக்கிறார்கள். அவரது இளம் பிராயத்திலிருந்தே அவர்தம் அருமைப் பெருமைகளை உணர்ந்து அறிந்த சுற்றத்தார்களில் ஒருவரான திருமதி.கே.மதுராம்பாள், ஸ்ரீரமண மகரிஷி அவர்களைப் பற்றி தான் கண்டவற்றையும், கேட்டவற்றையும், அறிந்துணர்ந்த சம்பவங்களையும் தொகுத்து 'தெய்வத்தின் நட்பு' என்ற பெயரில் நூலாக்கித் தந்திருக்கிறார்கள்.

ஸ்ரீரமணரைப் பற்றி இதுவரை வெளியான நூல்களில் இடம் பெறாத பல அரிய விஷயங்கள் இந்நூலில் இடம் பெற்றிருக்கின்றன. ஸ்ரீரமண பகவானின் பக்தர்களுக்கு இந்த 'தெய்வத்தின் நட்பு' பெரிய பொக்கிஷமாகக்கூடும்.

இந்நூலாக்கத்திற்கு முக்கிய காரணகர்த்தாவாக இருந்த திரு.ஷங்கரநாராயணன் அவர்களுக்கு நன்றியும் பாராட்டுதலும்.

பதிப்பகத்தார்.

**ஓம் நமோ பகவதே ஸ்ரீரமணாய!**

ஸ்ரீரமண மகரிஷிகளின் அருளும் கருணையும் எல்லையற்றது. உலகில் உள்ள அவரது பக்தர்கள் அனைவருக்கும் அவர் தம்அருளை அள்ளி அள்ளி வழங்கியிருக்கிறார் என்றும், வற்றாத, எடுக்க எடுக்கக் குறையாத அட்சய பாத்திரமாய் இன்றும் விளங்கும் அவரது அருட்சுனையில் பலன் பெற்றோர், பருகி மகிழ்ந்தோர் எண்ணிக்கை கணக்கில் அடங்காதது. அதில் பலவற்றை நாம் ஸ்ரீரமணாஸ்ரமத்தின் புத்தகாலயத்தில் உள்ள புத்தகங்களில் படித்துப் பேறு பெறலாம்; ஆனந்திக்கலாம்; அதிசயப்படலாம். இந்தியாவுக்கே வந்திராத அவர் பக்தர்களுக்கும், அவரை ஒருமுறை தரிசனம் செய்த அன்பர்களுக்கும், அவரை தரிசனமே செய்யாமல் அவர் புகழைக் கேட்டவர்களுக்கும் அவரது கருணை கடலென விரிந்திருக்கிறது.

அதில் பல அனுபவங்கள் நமக்குக் கிடைக்காமல் இருக்கலாம். ஆனால், பிறந்தது முதல் அவருடன்

பழகிய, விளையாடிய, ஒன்றாக உண்டு, உறங்கிய என் தந்தை விளாச்சேரி ஸ்ரீரங்கநாதய்யரின் அனுபவங்களோ எழுத்தில் அடங்காதது. இருந்தாலும், எப்போதும் எங்கள் வீட்டில் அவரைப் பற்றிப் பேசி, அவரது அனுபவங்களை எங்களுடன் பகிர்ந்து மகிழ்ந்தவற்றில் சிலவற்றையும், நான் நேரில் ஸ்ரீபகவானை பலமுறை தரிசித்து, ஆசி பெற்று, அவருடன் உரையாடி மகிழ்ந்தவற்றையும் உங்களுடன் பகிர்ந்து கொள்வதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன். இந்த அனுபவங்கள் பலவும் பல இடங்களில் ஸ்ரீரமணாஸ்ரமப் புத்தகங்களில் இடம் பெற்றிருந் தாலும், ஸ்ரீபகவானுடன் என் தந்தையின் நட்பையும், வெளிவராத சில அனுபவங்களையும் சேர்த்து, ஒரு புத்தகமாக வெளிக்கொணர விரும்பியதுடன், வயது காரணமாக என்னால் எழுத முடியாத நிலையில், எல்லா அனுபவங்களையும் நான் கூறக்கூற எழுதிய என் அக்கா பெண் திருமதி.பானு இராமச்சந்திரனுக்கு என் ஆசி களுடன் கூடிய நன்றி. புத்தகமாக வெளிவர எழுதிய வற்றைத் திருத்தி உதவி புரிந்த எழுத்தாளர் திரு.ஷங்கர நாராயணனுக்கும் என் ஆசிகளுடன் கூடிய நன்றி.

எழுதியவற்றைத் தலைப்பிட்டு, வரிசைப்படுத்தி எழுதிய எழுத்தாளர் **திரு.எஸ்.ஸ்ரீதுரை** அவர் களுக்கும் என் ஆசிகளுடன் கூடிய நன்றி. சில சம்பவங்கள் நடந்த ஆண்டுகள் (நான் பிறப்பதற்கு முன்) தெரியாததால் எழுதவில்லை. அனுபவங்களை எங்களுடன் பகிர்ந்து கொள்ளும்பொழுது என்

தந்தையிடம் நடந்த வருடம் பற்றிய விபரங்கள் கேட்க வேண்டும் என்று தோன்றவில்லை.

அதேபோல் என் தமையனார் திரு.கிருஷ்ணசாமி அவர்கள் ஸ்ரீரமணாஸ்ரமத்திற்கு எழுதிய கடிதங்களுக்கு அங்கிருந்து வந்த பதில் கடிதங்களில் ஒன்று மட்டும் என் அக்காவிடம் இருந்ததால் அதைப் பிரசுரித்திருக் கிறோம். மற்ற கடிதங்கள், என் தமையனாரின் எதிர் பாராத மறைவினால் எங்கோ காணாமல் போய்விட்டது மிகவும் மன வருத்தத்தைத் தருகிறது.

இப்புத்தகம் வெளிவர பேருதவியாக இருந்த நிவேதிதா பதிப்பக உரிமையாளர் **திருமதி.தேவகி இராமலிங்கம்** அவர்களுக்கும் என் ஆசியுடன் கூடிய நன்றி.

**- கே.மதுராம்பாள்**

# பொருளடக்கம்



# 1. ஸ்ரீபகவான் அவதாரம்

"தோன்றிற் புகழொடு தோன்றுக
- அஃதிலார்
தோன்றலிற் தோன்றாமை நன்று"

என்ற திருவள்ளுவரின் கூற்றையும் தாண்டி, புகழுடனும் ஒளியுடனும் தோன்றினார் ஸ்ரீரமண மகரிஷி என்பது மறுக்க இயலாத நிஜம்.

மதுரை மற்றும் அருப்புக் கோட்டைக்கு இடையே அமைந்த திருச்சுழி என்ற புண்ணியத்தலத்தில் வக்கீல் சுந்தரமய்யருக்கும் அழகம் மாளுக்கும் இரண்டாவது திருமகனாய்த் தோன்றினார் பகவான் ஸ்ரீரமணர்.

பகவான் அவதரித்த வீட்டிற்குப் பக்கத்து வீட்டில் தான் என் தந்தை வழிப் பாட்டனார் திரு.கிருஷ்ணசாமி அய்யரும் பாட்டியார் அனந்தலட்சுமி அம்மாளும் வசித்து வந்தனர். என்னுடைய அப்பா ரங்கன், பெரியப்பா சுப்பிரமணியன் மற்றும் என் அத்தைகள், சித்தப்பா என்று

தாத்தாவின் வாரிசுகள் அநேகம். தாத்தாவுக்கு போலீஸ் இன்ஸ்பெக்டர் உத்யோகம்.

தாத்தாவின் குடும்பமும், பகவானின் குடும்பமும் பரஸ்பர அன்னியோன்யத்துடன் பழகி வந்தார்கள்.

என் பெரியப்பாவும், பகவானைவிட ஒரு வயது மூத்தவரான என் அப்பாவும், வெங்கடராமன் என்ற திருப்பெயர் கொண்ட பகவானும், அவருடைய அண்ணா நாகசாமியும், தம்பி நாகசுந்தரமும் ஆகிய ஐந்து பேரும் விளையாட்டுத் தோழர்கள்.

அந்த ஐந்து பேரிலும், என் அப்பாவும், பகவான் ஸ்ரீரமணரும் நெருங்கிய நட்புக்கு இலக்கணமாகவே வாழ்ந்து வந்தார்கள் என்று பெரியவர்கள் சொல்லிக் கேட்டிருக்கிறேன்.

ஸ்ரீபகவானை வயிற்றில் சுமந்திருந்த போதே அழகம்மா அம்மாளின் (அப்படித்தான் நாங்கள் அவரை அழைப்போம்) உடம்பிலே விவரிக்க முடியாத ஒரு தேஜஸ் கூடி இருந்ததாம்.

உலகப் பற்றையெல்லாம் களைந்து, உன்னத ஞானத்தை அடைந்து, உலகத்தோர் அனைவராலும் புகழப்படக்கூடிய ஓர் உத்தமரை அல்லவா தனது உதிரத்தில் சுமந்திருந்தார் அந்த உத்தமத்தாய்...! அந்த அன்னையின் திருவுடலில் தேஜஸ் ததும்பியதில் ஆச்சர்யம் என்ன...?

''என்னமோ தெரியலை; இப்போவெல்லாம் என் உடம்பு ஒரு நாள் குளிர்ச்சியாய் இருக்கு. மறுநாள் ஒரேயடியாய் தகிக்கிறது. என் ஆத்துக்காரரோ, ''என்ன அழகம்மா, நீ இப்படித் திரும்பும்போது ஒரு ஒளி வீசறது; அப்பிடித் திரும்பும்போது இன்னொரு விதமாய்ப்

*பிரகாசிக்கிறதுங்கறார். எனக்கு ஒண்ணுமே புரியலை மாமி...''*

*என் பாட்டி அனந்தலட்சுமியிடம், (ரமணரைக் கர்ப்பத்தில் தரித்த காலத்தில்) அழகம்மா அம்மா இப்படியெல்லாம் கூறியதை அறிந்த என் பெரிய அண்ணன் கிருஷ்ணசாமி, தன்னுடைய ரமணாம்ருதம் என்ற நூலில் -*

*''மின்னுவதே(து) உன்றன் மேனியிலேயொரு*
*பொன்னெனவே எந்தன் மாதரசே!*
*தன்னையறிந்து ஓர் பாலகனுண்டாயின்*
*மின்னுவ(து) அற்புதம் ஒன்றுமில்லை''*

*(பக்கம்-9, வரிகள் 16-20)*

*என்று குறிப்பிட்டிருக்கிறார்.*

*1879-ஆம் வருடம் டிசம்பர் 30-ஆம் தேதிக்குச் சரியான மார்கழி மாதம் புனர்வசு நட்சத்திரத்தில் ஸ்ரீபகவான் திருச்சுழியில் அவதரித்தார்.*

*கர்ப்ப காலத்தில் அழகம்மா அம்மாவின் தோற்றப் பொலிவைக் கண்ட சுற்றத்தார், அழகிய பெண் குழந்தை பிறக்குமென்று அனுமானித்து, அப்படிப் பிறக்கும் பெண்ணை உறவிலேயே ஒரு பையனுக்கு மணமுடிக்கலாம் என்று முடிவு செய்திருந்தார்களாம்.*

*பெண் குழந்தைக்கு கள்ளிப்பால் கொடுக்கும் இந்தக்காலம் போலன்றி, பெண்ணாகப் பிறக்காமல் ஆணாகப் பிறந்து விட்டதே என்று அந்த உறவினர்கள் முணுமுணுத்தார்களாம்.*

*ஸ்ரீபகவானின் அவதாரத்தின்போது பிரசவம் பார்த்த - கண் தெரியாத - ஆனால் ராசியான - மருத்துவச்சி அந்த முணுமுணுப்புகளைக் கேட்டு -*

"அம்மா இனிச் சொல்லாதீர்கள் - அந்த வார்த்தை
மறுமுறை எங்கள் அம்மா
கண்ணிழந்த எனக்குமே
விண்ணிலுதிக்கும் பரிதியாய்
உண்மையொளி வீசு(து) - எவரும்
கண்ணைத் திறந்து பார்த்து மகிழும்!"

*(ஸ்ரீரமணாம்ருதம், பக்கம் - 10)*

என்று கூறினாளாம்.

தமது பூதவுடலை நீத்தபோது விண்ணில் ஓர் ஒளிக் கற்றையாய்த் தெரிந்த பகவான் ஸ்ரீரமணர், தமது அவதார நேரத்தில் கண்ணில்லாத மருத்துவச்சிக்கும் கண்கவர் ஒளியாய்க் காட்சி தந்திருக்கிறார்.

குழந்தைக்கு வேங்கடராமன் என்ற திருப்பெயர் இட்டனர்.

ஐந்தாவது வயதில் பள்ளிச் சேர்க்கை. ஏழாவது வயதில் பூணூல்.

பகவான் ஸ்ரீரமணரின் பிள்ளைப்பிராயம் எல்லாச் சிறுவர்களுடையதைப் போலவே விளையாட்டும் வேடிக்கையுமாய்க் கழிந்தது.

என்னுடைய அப்பாவும் பெரியப்பாவும் ஸ்ரீபகவான் மற்றும் அவருடைய சகோதரர்களுடன் ஒன்றாக விளையாடி, விளையாட்டாகச் சண்டையிட்டு இன்பமயமாகப் பொழுதைக் கழித்தார்கள்.

திடீரென்று ஒருநாள் ஸ்ரீபகவானின் தந்தையார் காலமானார். வாழ்க்கையின் ஒரே பிடிப்பாய் விளங்கிய தன் கணவனை இழந்து, சிறு குழந்தைகளையும் வளர்க்க வேண்டிய சுமையால் திகைத்து நின்ற தாயார் அழகம்மா

வுக்கு ஸ்ரீபகவானின் சித்தப்பாக்கள் சுப்பையரும், நெல்லையப்பரும் உதவ முன்வந்தார்கள்.

கடைசி மகன் நாகசுந்தரம், பெண் அலமேலு ஆகிய இருவரையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு நெல்லை யப்பர் வசித்த மானாமதுரைக்குச் சென்றார் அழகம்மா அம்மாள்.

ஸ்ரீபகவானும், அவருடைய அண்ணா நாகசாமியும், மற்றொரு சித்தப்பா சுப்பையருடன் சென்று முதலில் திண்டுக்கல்லிலும் பிறகு மதுரை சொக்கப்ப நாயக்கர் தெருவிலும் வசித்தார்கள்.

சிறிது காலத்தில் என் தாத்தாவுக்கும் மதுரைக்கு மாற்றல் ஆகிவிட, ஸ்ரீபகவானுக்கும் என் அப்பாவுக்கும் மறுபடியும் தொடர்பு உண்டாயிற்று. இருவரும் வெவ் வேறு பள்ளிகளில் படித்தாலும், மாலையில் பள்ளி முடிந்ததும் ஒன்றாக வீடுவந்து சேருவார்களாம். பிறகு ஒன்றாகச் சென்று வைகையில் நீந்தியும், குத்துச்சண்டை பயிற்சி எடுத்தும் விளையாடி மகிழ்வார்களாம். அப்பா தமது பிள்ளைப் பிராயத்தை நினைவு கூர்ந்து இவ்விஷயங் களை எல்லாம் ஆவலுடன் எங்களிடம் பகிர்ந்து கொள்வார்.





# 2. திருவண்ணாமலை வருகை

*1895*-ல் என் அப்பாவுக்குத் திருமணம், பதினாறாவது வயதில். அப்போது ஆறு வயதுச் சிறுமி யாயிருந்த என் அம்மாவுடன் நடந் தேறியது.

அடுத்த வருடமே, அதாவது *1896*-லேயே, தமது பதினாறாவது வயதில் தம்முடைய தந்தையைத் தேடிச் செல்வதாகக் கடிதம் எழுதி வைத்துவிட்டு, வீட்டிலிருந்து வெளியேறினார் பகவான் ஸ்ரீரமணர்.

ஆகஸ்ட் மாதம் வெளியேறிய அவர், செப்டம்பர் 30-ஆம் தேதி திருவண்ணாமலையை அடைந்தார். அன்று முதல், அண்டப் பேரொளியில் தாம் கலந்த அந்திமக்காலம் வரையில் பகவான் ஸ்ரீரமணர் திருவண்ணா மலையிலேயே தங்கியிருந்தார் என்பது வரலாறு.

ஸ்ரீபகவானின் இளம் பிராயத் தில் நடந்த தற்செயலான இரு நிகழ்ச்சிகள், பின்னாளில் அவர்

துறவறம் பூண இருந்ததற்குக் கட்டியம் கூறுவது போல் அமைந்து விட்டன.

வக்கீல் ஒருவரது கேஸ் கட்டுகளைப் பிரித்து விஷமம் செய்த ஸ்ரீரமணரைக் கண்டு கோபம் கொண்ட அவருடைய தந்தையார் சுந்தரமய்யர், மூத்த மகன் நாகசாமியை அழைத்து, ''இவனது துணிகளை உருவி, இவனைக் கோவணாண்டியாய் விரட்டிவிடு!'' என்றாராம். பிறகு ஒருவாறு கோபம் தணிந்தாராம் சுந்தரமய்யர்.

தந்தையார் காலத்திற்குப்பின் மதுரை வந்த பகவான் ஸ்ரீரமணர் அவ்வப்போது தன்னை மறந்து உட்கார்ந்திருந்ததைக் கண்ட அண்ணன் -

''படிப்பில் அக்கறை இல்லை என்றால், காட்டுக்குப் போய் தவம் செய்வதுதானே?'' என்று கேட்டிருக்கிறார்.

இவ்விரு நிகழ்ச்சிகள் ஸ்ரீரமணாமிருதத்தில் வருகின்றன.

''எந்தை இள வயதில் மனை
யொன்றிற் போய் விஷமம் செய்ய
தந்தை முனிந்(து) இவர்தம்மின்
துகிலுரிந்தே துரத்தி(டு) என்றார்
கல்வி பயின்றிடுநாளில்
அருணையதன் நினைவில்மனம்
செல்ல இவர் புத்தமும்
சோரவிட - தமையனிதை
நோக்கி அவர் நிலையறிந்து
வனம்தேடித் தவம்புரிய
சீக்கிரமே செல்லெனவே
விளையாட்டாய்ப் புகன்றாரே.
இருமுறையும் நேர்ந்திட்ட

தந்தைமொழி தமையன் சொல்லும்
குருவாக்காய்க் கொண்(டு) அவனி
விருப்பொழிக்க நினைந்தாரே''

*(பக்கம் 12, வரிகள் 1-12)*

இளம் வயதிலேயே தமது மனத்தில் புகுந்துவிட்ட அருணாச்சலம் என்னும் பெயரின் பொருள் புரியாமல் தவித்தார், பகவான் ஸ்ரீரமணர். திருவண்ணாமலை யாத்திரை சென்று வந்த முதியவர் ஒருவர் அருணாசலம் சென்று வந்தேன் என்று கூறக்கேட்ட பிறகுதான் 'அருணாசலம் என்றால் திருவண்ணாமலை' என்பது சிறுவன் வெங்கடராமனுக்குப் புரிந்தது. அவரது மனமும் அதையே நாடியது.

''மாய்ந்த வொரு சடலம்தன்னை
ஒருதினமும் கண்டிடவே
பாய்ந்ததுவே அவரகத்தே
மேனியழிவின் நினைவும்''

*(பக்கம் 11, வரிகள் 2-5)*

என்று ஸ்ரீரமணாம்ருதத்தில் வருவது போல், சடலம் ஒன்றைக் கண்ட இளம் வயது ஸ்ரீரமணருக்கு, இவ்வுடல் நிலையானதில்லை என்பதும் புரிந்து போனது.

ஒருமுறை, வீட்டு மாடியில் கட்டைபோல் தமது உடலைக் கிடத்திக்கொண்டு, ''நான் யார்? இறப்பு என்றால் அது உடலின் இறப்பா அல்லது உயிரின் அழிவா?'' என்றெல்லாம் சிந்தித்தபடி இருந்திருக்கிறார்.

சிந்தனையில் உதித்த கேள்விகளுக்கு விடை தேடும் பொருட்டே, திருவண்ணாமலை செல்ல முடிவெடுத்தார் ஸ்ரீரமணர்.

அவ்வாறு அவர் கிளம்புவதற்கான வாய்ப்பும் வசதியும் தானேவந்து பொருந்தியது.

தமையன் நாகசாமியின் பள்ளிக் கட்டணம் (அந்தக் காலத்தில் சம்பளம் என்பார்கள்) செலுத்த வேண்டிய பொறுப்பு, இளம் சிறுவனாகிய ஸ்ரீரமணரிடம் வந்தது. கட்டணம் ரூபாய் ஐந்தில் மூன்று ரூபாயை மட்டும் எடுத்துக் கொண்டு, தமது அறிவுத்தாகத்தைத் தீர்க்கவல்ல அற்புதத் தடாகமாம் திருஅண்ணாமலையை நோக்கிப் பயணித்தார்.

''என் தந்தையின் ஆணைப்படியே அவரைத் தேடிச் செல்கிறேன். யாரும் இதைத் தேடுவதற்காக வீண் முயற்சி செய்ய வேண்டாம்...!'' என்று எழுதி வைத்து விட்டுத்தான் கிளம்பினார் ஸ்ரீரமணர்.





# 3. ஸ்ரீபகவானைக் கண்டோம்!

ஸ்ரீபகவான் திருவண்ணா மலைக்குக் கிளம்பிச் சென்ற சில மாதங்கள் கழித்து என்னுடைய பாட்டி திருமதி.அனந்தலட்சுமி திருஅண்ணாமலை தரிசனம் முடித்த பிறகு பவழக்குன்றில் அவரைக் கண்டாராம்.

''யாரோ பிராமணசாமி, மௌனசாமி...!'' என்று பலரும் சொல்ல, ஓடிப்போய்ப் பார்த்தால் அது வேறு யாரும் இல்லை, ஸ்ரீரமணரேதான்.

தன்னுடைய தோழி அழகம்மா அம்மாளின் மகனை இந்தத் துறவுக் கோலத்தில் காண வேண்டியிருக் கிறதே என்று பெரிதும் கலங்கி இருக்கிறார். வாழைப்பழம் ஒன்றை உரித்துக் கொடுக்க, வாங்கிச் சாப்பிட்டரமணர், பாட்டியின் கேள்வி களுக்கு எந்தவித பதிலும் கொடுக்க வில்லை.

அவரைத் தன்னுடன் வருமாறு அழைத்ததற்கும் பதில் இல்லை. ஏமாற்றத்துடன் மதுரை திரும்பினார் பாட்டி.

மதுரை வந்தவுடன், தான் ஸ்ரீரமணரைச் சந்தித்த விஷயத்தை அழகம்மா அம்மாளிடம் தெரிவித்தார் என் பாட்டி.

உடனே ஸ்ரீபகவானின் சித்தப்பா நெல்லையப்பர் திருவண்ணாமலைக்குக் கிளம்பி வந்துவிட்டார். (இன்னொரு சித்தப்பா சுப்பையர் அதற்கு முன்பே காலமாகி விட்டார்). நெல்லையப்பரால் ஸ்ரீரமணரைத் திரும்ப அழைத்துக் கொண்டு முடியவில்லை.

பின்னர் பலமுறை ஸ்ரீரமணரே கூறியதுண்டு -

''சுப்பையர் மட்டும் உயிரோடு இருந்திருந்தால், என்னை அப்படியே குண்டுக்கட்டாகத் தூக்கிக் கொண்டு போயிருப்பார். பாவம், நெல்லையப்பர் ஒரு அப்பாவி...'' என்று.

சில நாட்கள் கழித்து, ஸ்ரீரமணரின் தாயாரே திருவண்ணாமலைக்கு வந்துவிட்டார், மூத்த மகன் நாகசாமியோடு.

பவழக்குன்றில் வீற்றிருக்கும் பகவான் ஸ்ரீரமணரிடம் எத்தனையோ கெஞ்சியும், அழுதும் பயனில்லை. மௌனமே பதிலாகக் கிடைத்திருக்கிறது. இரண்டு மூன்று நாட்கள் சென்றபின் ஏதாவது எழுதியாவது காண்பிக்கலாகாதா என்று கெஞ்சியபிறகு -

''அவரவரது பிராப்தத்தின் பிரகாரம் அதற்கானவன் ஆங்காங்கிருந்து ஆட்டுவிக்கிறான் என்றும், நடவாதது

என்ன முயற்சிக்கினும் நடவாது. எது நடக்குமோ அது என் தடை செய்யினும் நில்லாது. இதுவே திண்ணம். ஆதலின் மௌனமாய் இருத்தல் நன்று!'' என்று எழுதிக் காட்டியிருக்கிறார் ஸ்ரீரமணர்.

கனத்த மனத்துடன் அழகம்மாள் அம்மாளும், மகன் நாகசாமியும் மதுரைக்குத் திரும்பினார்கள்.

ஸ்ரீபகவான் எழுதிக் காண்பித்ததைக் கேள்வியுற்ற என் தந்தை, ''அதுவே நமக்குக் கிடைத்த உபதேசம்!'' என்று அடிக்கடிக் கூறி மகிழ்வார்.

எல்லோரும் போய்ப் பார்த்துவிட்ட பகவான் ஸ்ரீரமணரை, அவருடைய அத்தியந்த சிநேகிதராகிய என் அப்பா மட்டும் சந்திக்காமல் இருப்பாரா?

கிளம்பிவிட்டார் என் தகப்பனார், திருவண்ணா மலைக்கு.

1908-இல் முதல்முறையாகச் சென்றபோது, ஸ்ரீரமணர் விரூபாக்ஷ குகையில் தவம் புரிந்து கொண்டிருந்தார். எதுவும் பேசாத நிலையில், அவரைத் தள்ளி நின்றே தரிசித்துவிட்டு வந்து விட்டார் என் அப்பா.

இரண்டாவது முறை என் பாட்டி, அம்மா, அக்கா இவர்களுடன் ஸ்ரீபகவானை தரிசிக்கச் சென்ற அப்பா -

''என்னைத் தெரிகிறதா?'' என்று கேட்க -

''ரங்கன்'' என்று பதில் கூறினார்.

பக்கத்தில் இருந்த பழனிச்சாமி என்பவரிடம், ''இவர்களைத் தெரிகிறதா?'' என்று கேட்டிருக்கிறார் ஸ்ரீபகவான்.

முன்பு பவழக்குன்றிலே இருக்கும்போதே என் பாட்டி வந்து தரிசித்ததை பழனிச்சாமியும் நினைவு கூர்ந்திருக்கிறார்.

அதன்பிறகு அழகம்மா அம்மாளும், தம்பி நாக சுந்தரமும் ஸ்ரீரமணருடனேயே தங்க ஆரம்பித்தார்கள்.

அச்சமயம் ஸ்ரீரமணரின் அண்ணா நாகசாமியும், தம்பி நாகசுந்தரத்தின் மனைவியும் ஜீவித்திருக்கவில்லை.

ஸ்ரீபகவானின் தம்பி நாகசுந்தரமும் துறவு மேற் கொண்டு பகவானுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து வந்தார்.

பூர்வாசிரமத்தில் (துறவுக்கு முன்பு) பிச்சை என்று எல்லோராலும் அழைக்கப்பட்ட நாகசுந்தரம்தான் துறவுக்குப் பின்னர் ஸ்ரீநிரஞ்ஜனானந்தர் என்ற தீட்சா நாமம் பெற்றார்.

ஸ்ரீரமணாஸ்ரமம் என்ற அற்புதமான அமைப்பை நிறுவி வளர்த்தவர் ஸ்ரீநிரஞ்ஜனானந்தரே ஆவார்.

ஸ்ரீபகவானின் மறைவிற்குப் பின்னர் 1953 ஜனவரி யில் முக்தியடைந்த இவரது சமாதி ஸ்ரீரமணாஸ்ரமத்தில் அன்னையின் சமாதிக்கு நேர் எதிரே வெளியில் அமைந்து உள்ளது.

இவருடைய பூர்வாசிரம குமாரர் திரு.டி.என். வெங்கட்ராமன் (ஸ்ரீநிரஞ்ஜனானந்தரின் காலத்திற்குப்) பின்னர் ஸ்ரீரமணாஸ்ரமத்தின் பொறுப்புகளைத் திறம்பட நிர்வகித்து வந்து, ஸ்ரீரமணானந்தா என்ற பெயருடன் துறவும் ஏற்று ஆஸ்ரம வளாகத்திலேயே வாழ்ந்து வருகிறார்.

இவரும், இவரது இரண்டாவது குமாரர் ஸ்ரீகணேசனும் ஸ்ரீபகவானின் புகழ்பாடும் வெளியீடுகள் பலவற்றைப் பதிப்பித்து உதவினார்கள்.

இவரது மூத்த மகன் ஸ்ரீசுந்தரரமணன் தற்போது ஸ்ரீரமணாஸ்ரமத் தலைவராக இருக்கிறார். இளைய மகன் ஸ்ரீமணியும் ஆஸ்ரம நிர்வாகத் தொண்டிலேயே ஈடுபட்டிருக்கிறார்.

புதிய கட்டிடங்கள், புத்தகங்கள், கேசட்டுகள், சிடி-க்கள் வெளியீடு என்று இவர்கள் அனைவரின் நிர்வாகத் திறமையினாலும் ஸ்ரீரமணாஸ்ரமம் இன்று பிரும்மாண்டமாக வளர்ச்சி அடைந்து, ஆலமரம் போல் கிளைபரப்பி நிற்கிறது.





## 4. சிநேகத்தின் சிகரம்

ஸ்ரீபகவானின் தாயாருக்கு என்னுடைய தந்தையின் மீது அலாதிப்பிரியம். அப்பாவும் அந்த தெய்வத்தாயிடம் சிறு பிராயத்தில் இருந்தே மரியாதையும் அன்பும் கொண்டு விளங்கினார்.

1917-இல் ஒருமுறை என் அப்பாவையும், ஸ்ரீபக வானையும் ஒன்றாக உட்கார வைத்து அமுது படைத்து, அவர்களுடன் ஆனந்த மாகப் பேசிக் கொண்டிருந்தார் அழகம்மா அம்மாள்.

அப்போது-

''மகான்களின் தரிசனம் கிடைப்பது மிகக்கடினம். அடிக்கடி அவர்களை தரிசித்தால், ஆடையை அவர்கள் நெய்து தருவார்கள்'' என்று சொன்னாராம் ஸ்ரீபகவான்.

அதாவது, ஒருவரிடம் பஞ் சினைக் கொடுத்து, அதை அவர் நூலாக நூற்க, வேறொருவர் அதனைத் துணியாக நெய்து கொடுக்க, இன் னொருவர் அதனை ஆடையாகத்

தைத்துக் கொடுத்து அதனை நாம் அணிவதைவிட - ஆயத்த ஆடை(ரெடிமேட்)யே நமக்குக் கிடைத்து விட்டால் எத்தனை செளகரியம், எவ்வளவு திருப்தி...

இறைவனின் அனுக்கிரகம் என்கிற ஆயத்த ஆடையை நமக்கு அப்படியே அளித்து அருள்பவர்கள் மகான்களே...

- என்பதுதான் ஸ்ரீபகவானின் உபதேசம்.

அழகம்மா அம்மாள் வாய்க்கும், வயிற்றுக்குமான ஸ்தூல உணவைக் கொடுக்க, அவரது திருவயிற்றில் உதித்த பகவான் ஸ்ரீரமணர், செவிக்கும், ஆத்மாவுக்குமான சூட்சும ஆகாரத்தை அனுக்கிரகித்த சிறப்பை எங்களிடம் சொல்லிச் சொல்லி மகிழ்வார் என் அப்பா.

அந்த உபதேசத்தைச் சிரமேற்கொண்டு, மகான்கள் பலரை அடிக்கடி தரிசிப்பதை நாங்கள் எங்களது வாழ்க்கை முறையாகவே ஆக்கிக் கொண்டோம்.

1917-இல் வேறொரு சமயம்-

''அம்மா, உங்கள் மகன் எதையெல்லாம் அடைந்திருக்கிறாரோ, அதிலெல்லாம் எனக்கும் பங்கு உண்டு தானே?'' என்று வேடிக்கையாகக் கேட்டாராம் என் அப்பா, அழகம்மா அம்மாளிடம்.

''ரங்கன் என்ன சொல்றான், கேட்டியா?'' என்று தாயார் கேட்க-

''ரங்கன் நம்மில் ஒருவன்தானே, அவனுக்கும் கண்டிப்பாய்ப் பங்கு உண்டு!'' என்று சிரித்துக் கொண்டே பதில் சொன்னாராம் ஸ்ரீபகவான்.

என் அப்பாவுக்கும் ஸ்ரீரமணருக்குமான சிநேகிதமானது, 'பதித பாவன ஸீதாராம்' என்று பஜனைகளில் பாடப்படுவது போல், பலவிதக் கஷ்டங்களில் இருந்த

என் அப்பாவையும், எங்களையும் கைதூக்கி விடுவதாகவும், அதே சமயம் ஸ்ரீரமணரின் துறவு யோகத்திற்குப் பங்கம் விளைவிக்காத உன்னதத் தன்மை வாய்ந்ததாகவும் இருந்தது.

''கௌபீன ஸம்ரக்ஷணார்த்தம் இதி ஸம்ஸார!'' என்று வடமொழியில் சொல்வது போல, சுற்றத்தாரைக் கைதூக்கி விடுவதற்காக துறவறத்தை விட்டு மீண்டும் சம்சாரியாகவில்லை ஸ்ரீரமணர். பற்றற்ற பக்குவ நிலையை உணர்த்தியதன் மூலம், மற்றவர்களையும் தம் அருகே அழைத்துச் சென்றார் ஸ்ரீரமணர் என்பதுதான் நிஜம்.

என் அப்பாவுக்கு நிலையான வேலை என்று எதுவும் கிடையாது.

ஒருமுறை பெரிய நிறுவனம் ஒன்றின் மேனேஜராக இருப்பார். பிறகு ஆறுமாத காலம் அவருக்கு வேலை இருக்காது. வீட்டில் மூன்றுவேளைச் சாப்பாட்டிற்கான வருமானம் கூட நிலையாகக் கிடைத்தது கிடையாது.

இந்நிலையில்-

தம்மைக்காண திருவண்ணாமலைக்கு வந்த என் அப்பாவிடம் ஸ்ரீரமணர்-

''ரங்கா, நீபாட்டுக்கு வந்துட்டியே, உன் பெண்டாட்டி பிள்ளைகளுக்குச் சாப்பாட்டுக்குப் பணம் கொடுத்திருக்கியா?'' என்று கேட்டாராம்.

''கொடுத்துட்டுத்தான் வந்தேன்!'' என்ற என் அப்பாவின் பதிலில் ஸ்ரீபகவானுக்குத் திருப்தியில்லை போலிருக்கிறது-

''ரங்கா, ஆண்கள் எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம், எங்கே வேண்டுமானாலும் போகலாம்,

ஆனால் பெண்களும் குழந்தைகளும் என்ன செய்வார்கள்...?'' என்று கேட்டிருக்கிறார்.

பிரபஞ்சத்தையே உணர்ந்து கொண்ட மகானுக்கு, தம் நண்பரின் வீட்டு நிலைமை தெரியாமல் போகுமா என்ன...?

அன்றிரவு தூக்கம் வராமல் புரண்ட என் அப்பாவிடம்-

''ரங்கா, ஞானம் வேணும்னு ஒருவன் தவமிருந்தான். அவன் எதிரில் சிவபெருமான் பிரத்யட்சமாகி 'என்ன வரம் வேண்டும்'னு கேட்க, அந்தப் பிரகிருதி 'எனக்கு ஏழ்மை வேண்டும்'னு கேட்டானாம். சிவபெருமான் திகைச்சுப்போய், 'எதுக்கப்பா ஏழ்மையைக் கேட்கிறே?' என்று கேட்க, 'சுவாமி செல்வம் கிடைச்சால் உம்மை நினைக்கவொட்டாமல் தடுத்துடும், அதனால்தான் ஏழ்மையைக் கேட்டேன். உம்மை மறந்து போனால் ஞானம் எப்படி வரும்'னு பதில் சொன்னானாம்'' என்று ஒரு கதையைச் சொல்லி, உலகாயத செல்வங்களைவிட, ஆத்ம ஞானம் என்கிற செல்வமே உயர்ந்தது என்ற தத்துவத்தை உணர்த்தினாராம் ஸ்ரீபகவான்.

அவ்வப்போது தமது நகைச்சுவையான பேச்சுகளினால் ஸ்ரீபகவான் என் அப்பாவின் கடனாளி வாழ்க்கையை கேலி செய்தும் இருக்கிறார்.

ஒருசமயம்-

''ரங்கா இப்போது நானும் கடனாளி தெரியுமா...? ஐநூறு ரூபாய்க்கு சோப்பும் சீப்பும் வாங்கிய கடனாம்...!'' என்று சிரித்தபடி சொல்லியிருக்கிறார் ஸ்ரீபகவான்.

திகைத்துப்போன என் அப்பா, ஸ்ரீபகவானும் ஒரு முஸ்லிம் வியாபாரி ஒருவரும் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டு, அந்த வியாபாரியின் கடையிலிருந்து ஆசிரமத்திற்கு ஐந்நூறு ரூபாய்க்கு சாமான்கள் வாங்கப்பட்டிருந்ததை அறிந்து கொண்டு, ஸ்ரீபகவானின் பக்தரான பணக்காரர் ஒருவரைத் தொடர்பு கொண்டு, அவர் மூலம் அந்தக் கடனைப் பைசல் செய்ய ஏற்பாடு செய்தாராம்.

''பணம் ஞானத்தை அடையப் பெரும் தடை!'' என ஸ்ரீபகவான் அடிக்கடி சொல்லுவாராம்.

அதே சமயம் குடும்பஸ்தர்கள் வீட்டைத் துறந்து விட்டு, சன்னியாசம் வாங்கிக் கொள்வதை ஒத்துக்கொள்ள மாட்டாராம். ''குடும்பத்தில் இருந்து கொண்டே, பற்றை விலக்கி ஞானத்தை அடையணும்!'' என்பது ஸ்ரீபகவானின் உபதேசம்.





# 5. அப்பாவின் துறவு முயற்சிகள்

ஸ்கந்தாஸ்ரமத்தில் ஸ்ரீரமணர் இருந்தபோது, என் அப்பா, ''நான் சன்னியாசம் வாங்கிக் கொண்டு ஹரித்து வாரமோ, ரிஷிகேசமோ போய்விடலாம் என்றிருக்கிறேன்!'' என்று சொல்லியிருக்கிறார்.

ஸ்ரீரமணர் ஒன்றும் பேசாமல் குடிலுக்குள்ளே சென்று ஸ்ரீபக்த விஜயம் என்ற நூலை கொண்டு வந்து மகான் விட்டோபாவின் கதையைப் படித்துக் காண்பித்தாராம். அதில் விட்டோபாவின் பிள்ளை ஞான தேவர், ''நாம் எங்கு சென்றாலும், நமது மனமும் நம் கூடவே வரும்; அதனால் மனதை மாற்ற வேண்டுமே தவிர, உடலால் வீட்டை விட்டு வெளியேறுவதில் பயனில்லை'' என்று உபதேசித்த பகுதியைச் செவி மடுத்த என் அப்பா, மெதுவாகத் துறவு எண்ணத்தைக் கைவிட்டார்.

துறவு எண்ணத்தை அப்பா விட்டாலும், அப்பாவை அது சுலபத்தில் விடவில்லை.

பலமுறை என் அப்பா சன்னியாசம் மேற்கொள்ளத் துணிந்த போதெல்லாம், பகவான் ஸ்ரீரமணர் ஏதாவது சமாதானம் சொல்லி அந்த எண்ணத்தை மாற்றி விட்டிருக்கிறார்.

''பிறகு, நீங்கள் மட்டும் ஏன் சன்னியாசி ஆனீர்கள்?'' என்று என் அப்பா ஒருதரம் கேட்டுவிட-

சிறிதும் கோபப்படாமல் கூறினார் ஸ்ரீரமணர்-

''அது விதி!'' என்று.

''இல்லறத்தார்க்குப் பலவிதக் கஷ்டங்கள் இருப் பினும், ஞானத்தை அடைவது சுலபமே. தாமரை இலைத் தண்ணீர் போல ஒட்டியும் ஒட்டாமலும் இருந்தால் கை கூடும்'' என்று தொடர்ந்து கூறினாராம் பரிவுடன்.

ஸ்ரீரமணரின் பரிவும் கருணையும் அத்துடன் தீரவில்லை...

என் அப்பா எங்காவது சொல்லாமல் கொள்ளாமல் ஓடிவிட்டால், எங்கள் குடும்பத்தின் கதி என்னாகுமோ என்ற கரிசனம் மேலோங்கியிருந்த ஸ்ரீபகவான்-

என் அப்பா கொஞ்ச நேரம் ஆஸ்ரமத்தை விட்டு வெளியே சென்றால்கூட-

''அவனுக்கு நேரம் சரியில்லை, ஆசிரமத்திற்கு அவன் திரும்பி வரும்வரை கண்காணித்துக் கொண்டு இரு!'' என்று கூறி யாராவது ஒருவரை என் அப்பாவின் பின்னால் அனுப்பி வைப்பார்''.

'உடுக்கை இழந்தவன் கை போல...'

''நகுதற் பொருட்டன்று...'

என்றெல்லாம் நட்பின் சிறப்புகளைப் பற்றித் திருக்குறளில் சொல்லியிருக்கிறதல்லவா-

என் அப்பாவுக்கும், பகவான் ஸ்ரீரமணருக்கும் இடையிலான உறவு, சிநேகிதம் என்ற சொல்லுக்கு அர்த்தம் கொடுப்பதாயிருந்தது என்று சொன்னால் மிகையாகாது என்றுதான் தோன்றுகிறது.

சிநேக பாவத்துடன், சிஷ்ய-குரு பாவமும் சேர்ந்த அவர்களது உறவை அர்ஜுனன்-ஸ்ரீகிருஷ்ண நட்புக்குச் சமமாகவே கூறலாம்.

என் அப்பா சன்னியாசவேட்கையை ஒரு வழியாக விட்டபிறகு ஒருதரம் ஸ்ரீரமணர்-

''ஏன் ரங்கா, நான் விரூபாட்ச குகையில் இருந்த போது வந்து பார்த்தியே, ஏன் பேசாமல் போயிட்டே?'' என்று பரிவுடன் வினவியிருக்கிறார்.

ஸ்ரீபகவான் மௌனமாய் இருந்ததால், அப்போது பேசாமல் திரும்பிவிட்டிருந்த என் அப்பா, 'என்னோடு ஏன் பேசாமல் போய்விட்டாய்?' என்ற ஸ்ரீபகவானின் கேள்வியில் தெறித்த பரிவிலும், கனிவிலும் அப்படியே நெகிழ்ந்து போனார்.

அப்பா ஏதாவதொரு கஷ்டத்திலிருப்பது வழக்கம் தான். அவரது மனப்புண்ணை ஆற்றுவதற்காகவே உபதேசம் செய்ய விரும்பியது போல் ஒருதரம் பேசினார் ஸ்ரீபகவான்-

''ரங்கா நீ ரொம்ப கஷ்டப்படறியா? இதெல்லாம் கனவு மாதிரிதான். கனவில் நம்மை யாரோ அடிப்பது போலவும், அது வலிப்பது போலவும் இருக்கும். விழித்து எழுந்தால், 'நல்லவேளை, இது கனவுதான்!' என்று மனம் மகிழ்கிறோம். அது போலத்தான், ஞானம் வந்தால் இந்த வாழ்வே கனவு போல் ஆகிவிடும்...''

கஷ்டப்படும் ஒரு ஜீவாத்மாவைக் கடைத்தேற்றத் துடிக்கும் ஸ்ரீரமணருக்கு, 'பகவான்' என்ற பட்டம்தான் எத்தனை பொருத்தம்...!





# 6. ஸ்ரீரமண முத்திரை

*சன்னியாசவேட்கை தகர்ந்த பிறகு என் அப்பா ஸ்ரீரமணரிடம்-*

''நான், என் உடல், உயிர், உடைமைகள், குடும்பப் பொறுப்புகள் எல்லாவற்றையும் தங்களிடம் ஒப்படைத்து விட்டேன். நான் உங்கள் வேலைக்காரன். நீங்கள் சொல்வதைச் செய்வதுதான் என் கடமை. உங்களால் இயக்கப்படும் ஒரு பொம்மைதான் நான்'' என்று அடிக்கடி சொல்வாராம்.

*அதைக் கேட்டதும் ஸ்ரீபகவான் 'ஓஹோ' என்று சிரிப்பாராம்.*

''அவர் முன்பு பணம் வேண்டும், அது வேண்டும், இது வேண்டும் என்றெல்லாம் கேட்கவே தோன்றாது!'' என்பார் என் அப்பா.

கேட்காமலேயே கொடுக்கின்ற கற்பகத்தருவே ஸ்ரீரமணர் அல்லவா...

என் அப்பாவுக்கு, என்னையும் சேர்த்து ஏழு பெண் குழந்தைகள். இரண்டு ஆண் குழந்தைகள். ஒரு பெண் குழந்தை சிறுவயதில் இறந்து விட்டாள்.

ஏழாவது பெண் பிறந்ததும்-

''ரங்கா உனக்கென்ன குறைச்சல். சப்த கன்னிகைகளைப் பெற்றிருக்கிறாய்...!'' என்று கூறிப் புன்னகைத்திருக்கிறாராம் ஸ்ரீரமணர்.

கருத்தடை பற்றிக் கேள்விப்படாத காலம் அது.

''ஏகப்பட்ட பெண் குழந்தைகளாச்சு. இத்தோட வாவது நிற்கட்டும் என்று, ஏழாவதிற்கு மங்களம்னு பெயர் வெச்சிருக்கிறேன்!'' என கூறியிருக்கிறார் என் அப்பா...

ஸ்ரீபகவானோ, வாத்ஸல்யத்துடன் என் அப்பாவிடம் கூறினார்-

''அம்மா பேரை இந்தப்பெண் குழந்தைக்கு வை! இனிமேல் குழந்தை பிறக்காது...!'' என்று கூறி ஆசிர்வதித்திருக்கிறார்.

ஞானியின் வாக்கு பலித்ததில் வியப்பென்ன...

அழகம்மா என்று பெயர்மாற்றம் பெற்ற மங்களத்திற்குப் பிறகு வேறு குழந்தை பிறக்கவேயில்லை.

ஒரு நாள் ஸ்ரீபகவானும், என் அப்பாவும் திருவண்ணாமலையை (கிரி)வலம் வந்தபோது-

''ரங்கா, இங்கே தங்கம் செய்கிற பச்சிலைகள் இருப்பது தெரியுமா உனக்கு?'' என்று வினவியிருக்கிறார் ஸ்ரீபகவான்.

'நிஜமாகவே கேட்கிறாரா, அல்லது தமது மன உறுதியைச் சோதிக்கிறாரா?' என்பதை என் அப்பாவால் உடனடியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. பதில் சொல்லாமல் மெளனமாகவே இருந்துவிட்டார் அப்பா.

தெய்வமே ஸ்ரீரமணர் உருவில் எதிரில் நிற்கும் போது, தங்கம் செய்யும் பச்சிலைக்கு என்ன அவசியம்...

அப்பா தனது பணத்தேவைகளை ஸ்ரீரமணரிடம் கூறிக் கொள்வதும் இல்லை. ஆனால் ஸ்ரீரமணராகவே முன்வந்து என் அப்பாவின் பணத்தேவையைப் பூர்த்தி செய்வதும் நடக்கத்தான் செய்தது.

1925-இல் அப்பா தமது இரண்டாவது மூன்றாவது பெண்களின் திருமணத்திற்கான பணக்கவலையில் இருந்தபோது-

''என்ன ரங்கா, பணக்கஷ்டத்தை நினைச்சுக் கஷ்டப்படறியா, ஒரு பத்தாயிரம் இருந்தால் போதுமா?'' என்றார்.

எப்போதும் போல மௌனமாய் இருந்திருக்கிறார் என் அப்பா.

ஸ்ரீபகவானிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு மதுரைக்குத் திரும்பிவந்த சில நாட்களில் என் அப்பாவுக்கு இன்ப அதிர்ச்சி தேடிவந்தது.

அப்பாவின் பங்காளிகளின் வீடு விற்கப்பட்டு, அதில் அப்பாவின் பங்காக ரூபாய் பத்தாயிரம் வீடு தேடி வந்தது. அந்தக் காலத்துப் பத்தாயிரம் ரூபாய் என்றால் அதிர்ஷ்ட லட்சுமியே குடித்தனம் வந்தாற் போலத்தான்.

1928-இல் என் சகோதரிகள் பர்வதம், மீனாட்சி இருவருடன் என் பெரியப்பா மகள் ருக்மிணியின் கல்யாணமும், மூன்றாக இருக்கக் கூடாதே என்று, என் சகோதரன் வெங்கடரமணின் பூணூல் கல்யாணமுமாகச் சேர்த்து நான்கு சுப விசேஷங்கள் வெகு விமரிசையாக ஒரேபந்தலில் நடந்தேறின.

மூன்று பெண்களுக்கும் நகைகள் என்ன, நெய்யில் செய்த பட்சணம், பலகாரம் என்ன...

ஐந்து நாள் கல்யாணம் அமோகமாக நடந்தேறியது.

விற்கப்பட்ட சொத்தாகிய என் அப்பாவின் பங்காளியின் வீடு என்பது கப்பல் போலப் பெரியது. மதுரையில் மேலமாசி வீதியிலிருந்து, மேலக் கோபுர வாசல் வரை நீண்டிருக்கும் அந்தப் பெரிய வீட்டை வாங்கியவர் யார் தெரியுமா?

பிரபல கோனார் நோட்ஸ் பதிப்பக உரிமையாளர் ஸ்ரீ இ.மா.கோபாலகிருஷ்ணக் கோனார்தான்.

அந்த வீட்டின் வழியே செல்லும் போதெல்லாம், என் அப்பாவுக்கு ஸ்ரீபகவானின் அருளால் எதிர்பாராமல் கிடைத்த அந்த பத்தாயிரம் ரூபாய்தான் நினைவுக்கு வருமாம்.

வேறொரு சமயம் வேலை ஏதும் கிடைக்காமல் வருமானமின்றி அப்பா கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த போது-

''மேனேஜர் வேலை கிடைத்தால் செய்வியா?'' என்று கேட்டிருக்கிறார் ஸ்ரீபகவான் விளையாட்டாக.

அடிக்கடி மதுரையிலிருந்து சென்னைக்கும், சென்னையிலிருந்து மதுரைக்கும் சென்றுவரும் போதெல்லாம் என் அப்பாவுக்கு ஸ்ரீரமணரை தரிசிக்கும் வழக்கம் உண்டு.

அவ்வாறு சென்னை சென்ற என் அப்பாவுக்கு ஸ்ரீராமவிலாஸ் என்ற தனியார் மோட்டார் கம்பெனியில் மேனேஜர் வேலை கிடைக்கவும், எங்கள் குடும்பமே மகிழ்ச்சியில் திளைத்தது.

மேனேஜர் என்றவுடன் என் அப்பா கூறிய வேறொரு சம்பவமும் நினைவுக்கு வருகிறது.

ஒரு தரம் அப்பா சென்னையிலிருந்து திருவண்ணாமலைக்குச் சென்றபோது, ஸ்ரீபகவான் வெறும் சாதமும் பருப்பும் மட்டுமே சாப்பிட்டுக் கொண்டிருந்தார்.

யாரோ ஒருவர் தன்னை மேனேஜர் என்று சொல்லிக்கொண்டு, ஸ்ரீபகவானுக்குச் சாதமும் பருப்பும் மட்டுமே கொடுக்கச் செய்து கொண்டிருந்தார். வேறு எந்த பழமோ, பண்டமோ யார் மூலம் காணிக்கையாக வந்தாலும், அதனை ஸ்ரீபகவானுக்குக் கொடுக்கவிடாமல் செய்து கொண்டிருந்தார்.

அப்பா ஸ்ரீபகவானுக்கு நிவேதனமாக வாழைப் பழங்களை வாங்கிக் கொண்டு போயிருந்தார்-

''பகவானே உங்களுக்கு உடம்புக்கு என்ன செய்கிறது? உங்களுக்காக நான் வாழைப்பழம் கொண்டு வந்திருக்கிறேன்'' என்று அப்பா கூற-

''நீ என்ன நினைக்கிறாயோ, அதையே செய்!'' என்று அனுமதி கொடுத்துவிட்டார் ஸ்ரீபகவான்.

அப்பா ஆனந்தமாக உரித்துக் கொடுத்த வாழைப் பழங்களை ஸ்ரீபகவான் சாப்பிடுவதைப் பார்த்துவிட்ட அந்த 'மேனேஜர்' அப்பாவுடன் சண்டைக்கு வந்து விட்டாராம்.

ஸ்ரீபகவானும் நடுவில் புகுந்து-

''இதுக்கு (தமக்கு) என்ன உடம்புக்கு, எதுக்காக உணவுக் கட்டுப்பாடு...?'' என்று கேட்டார். பலரும் கூடிவிட்டார்கள்.

கூட்டத்தில் ஒருவர் ஸ்ரீபகவானிடம்-

''இவர் (மேனேஜர்) எத்தனை ரூபாய்க்கு உங்களை வாங்கியிருக்கிறார்...?'' என்று கேட்க-

ஸ்ரீபகவானும் கேலியாக-

''ஐயாயிரம் ரூபாய்க்கு...'' என்று பதில் கொடுக்க-

நிலைமை ஒருவாறு தணிந்த பிறகு ஸ்ரீபகவான் என் அப்பாவிடம் கூறினார்-

''ரங்கா, முதலில் இங்கே வருகிறவா பயபக்தி யோடுதான் வர்றா. பின்பு பல தடவை வந்து போய்ப் பழகியதும் கொஞ்சம் கொஞ்சமாக உரிமை எடுத்துக் கொண்டு, தன்னையே மேனேஜர்னும் சொல்லிண்டு, எல்லாரையும் அதட்ட ஆரம்பிச்சுடறா... இது எப்படி இருக்கு...?''

அப்பா, அன்று தனிமையில் ஸ்ரீபகவானிடம்-

''உங்களிடம் வந்தாலே, 'தான்' என்ற அகந்தை அழிய வேண்டுமே, ஆனால் சிலருக்கு அது அதிக மாவதைப் பார்க்கிறேன்...!'' என்று கூறியிருக்கிறார்.

ஸ்ரீபகவானோ, மகான்களுக்கே உரிய அமைதியுடன் பதில் கொடுத்தார்-

''நான் அழிய வேண்டுமானால், அது முழுவதுமாக வெளியே வந்துதானே ஆக வேண்டும்... தண்ணீரைச் சுட வைத்தால் அது கொதித்த பிறகுதானே ஆவி யாகிறது...?''

எளிமையான விளக்கம்.

உயர்வான தத்துவம்.

இதுவே பகவான் ஸ்ரீரமணரின் முத்திரை.





## 7. கல்லும் கனியாகும்

''ரங்கா, இங்கே நிறைய கண்மூடிச் சாமியார்கள் வருவதைப் பார்த்திருக்கிறாயா...?'' என்று ஒரு முறை என் அப்பாவிடம் கேட்டிருக்கிறார், ஸ்ரீபகவான்.

அப்பாவோ ஒன்றும் புரியாமல் ஸ்ரீபகவானைப் பார்த்தார்.

''புரியலையா? இங்கே பகவானைப் பார்க்கணும்னு தான் வரா. ஆனா இங்கே வந்த உடனே கண்ணை மூடி உட்கார்ந்துக்கறா. கண்ணை மூடிண்டு உட்காருவதற்கு இருந்த இடத்திலேயே இருக்கலாமே, இங்கே ஏன் வரணும்?'' என்று ஸ்ரீபகவானே புதிரின் முடிச்சை விடுவித்தாராம்.

வாஸ்தவம்தான்.

ஸ்ரீபகவானைத் தரிசிக்க வருகிறவர்களில் பலர் அவர் முன்பு கண்களை மூடி தியானத்தில் இருப்பது போல் உட்கார்ந்து விடுகிறார்கள். ஸ்ரீபகவானின் அக்ஷதினவு (கடைக் கண் அருள்) கிடைக்காதா என்று

பலகாலம் ஏங்கித் தவிப்பவர்கள், இங்கே வந்ததும் அந்தக் கருணைத் திருமுகத்தையும், கடாட்சம் பொழியும் திருக்கண் களையும் தங்களது இரண்டு கண்களாலும் அள்ளிப் பருகிடாமல், கண்மூடி நிற்பது எத்தனை பேதைமை...?

ஸ்ரீபகவானின் திருவுள்ளத்தினை அறிந்த எங்கள் குடும்பத்தினர், அதன்பிறகு எந்தத் திருக்கோயில் கடவுள்களையோ ஆன்மிக மகான்களையோ தரிசிக்கும் போது எங்கள் கண்களை மூடிக் கொள்வதை அறவே தவிர்த்தோம்.

தனியறையில் தியானத்தில் இருக்கும்போது மட்டுமே எங்களின் கண்களை மூடிக் கொள்வது என்றும் உறுதி எடுத்தோம்.

ஸ்ரீபகவானின் கருணை எல்லையற்றது. பேதங்களை அறியாதது.

'துஷ்ட நிக்ரஹம், சிஷ்ட பரிபாலனம்!' என்று கூறுவார்கள்.

தீயோரை தண்டித்தலும், நல்லோரைக் காத்தலும் கடவுளின் தொழில் என்ற பொருள்தரும் வாசகம் இது.

ஸ்ரீபகவானின் பரிபாலனமோ வேறுவிதம்.

சாது ஜனங்களையும், சன்மார்க்க பக்தர்களையும் மட்டுமின்றி, முரடர்களையும், தவறான வழி நடப்பவர் களையும்கூடத் தமது கருணை விழியால் கடாட்சித்து அருளி இருக்கிறார் ஸ்ரீபகவான்.

இதற்குச் சரியான உதாரணம் என் பெரியப்பாதான்.

சுப்பிரமணியன் என்ற பெயருடைய என் பெரியப்பா பெரிய முரடர். வேண்டாத சகவாசங்கள்

வேறு அவருக்கு உண்டு. அடிதடிகளில் ஈடுபட்டு, குடும்பப் பொறுப்புகளைக் கவனிக்காதவர். ஜனங்களிடம் போக்கிரி மணி என்று பெயர் எடுத்தவர். தவிரவும், ஆன்மிக விஷயங்களிலும் நாட்டம் ஏதும் இல்லாதவர். ஸ்ரீபகவானை என் அப்பா தரிசனம் செய்வதைக் கேலி செய்யும் என் பெரியப்பா சுப்பிரமணியனை ஒருதரம் வலுக்கட்டாயமாக ஸ்ரீபகவானிடம் அழைத்துச் சென்றிருக்கிறார் என் அப்பா.

நம்முடன் விளையாடியவன், நம்மைவிடச் சிறியவன், இவன்தான் பகவானா என்ற அலட்சிய எண்ணத்துடன் என் பெரியப்பா ஸ்ரீபகவானைப் பார்க்கவும்-

''இவரைத் தெரிகிறதா?'' என்று என் அப்பா (பெரியப்பாவைச் சுட்டிக்காட்டி) கேட்கவும்-

''போக்கிரி மணியைத் தெரியாதா என்ன?'' என்று கேட்ட பகவான், என் பெரியப்பாவின் தலை முதல் கால் வரையில் தமது அருட்பார்வையை ஒருமுறை வீசி யிருக்கிறார்.

அவ்வளவுதான்-

அடியற்ற மரம் போல் என் பெரியப்பா சுப்பிர மணியன் ஸ்ரீபகவானின் திருவடிகளில் விழுந்து, அவற்றைப் பற்றிக்கொண்டு-

''எனக்கு ஏதேனும் உபதேசம் செய்யுங்கள்!'' என்று கெஞ்சியிருக்கிறார்.

ஸ்ரீபகவானோ-

''உனக்கென்ன உபதேசம், சிவனேன்னு இரு!'' என்று கூறினாராம்.

அவ்வளவுதான்.

மரக்கட்டை மலர்க்கொடியானது.

கல் அங்கே கனியானது.

ஸ்ரீபகவானின் உபதேசத்தைக் கேட்ட நொடியிலிருந்து, என் பெரியப்பா சுப்பிரமணியன், தமது முரட்டுத் தனங்களை எல்லாம் விட்டுவிட்டு, சிவசிவ என்று ஈஸ்வரநாம ஸ்மரணையுடன் அநாவசியப் பேச்சுக்களைத் தவிர்த்து வாழத் தொடங்கிவிட்டார்.

போக்கிரி மணியைப் புனிதர் மணியாக்கியது ஸ்ரீபகவானின் கடைக்கண் பார்வையின் வீர்யம்.

சில நாட்களில் சன்னியாசமும் மேற்கொண்ட பெரியப்பா, தமது வீட்டுத் திண்ணையில் வீற்றிருந்தார்.

கணவரது சன்னியாசக் கோலம் கண்டு கலங்கிய என் பெரியம்மாவைத் தேற்றினார் பெரியப்பா-

''கவலைப்படாதே! நான் இறந்து நாற்பது நாட்களில் உன்னையும் அழைத்துக் கொள்வேன்!'' என்று சொன்னது போலவே-

1934-இல் பெரியப்பா முக்தியடைந்த நாற்பதாம் நாள் என் பெரியம்மாவும் சிவலோகப்பதவி அடைந்தார்.

பெரியப்பா சன்னியாசம் மேற்கொள்வதற்குக் கொஞ்சம் நாட்கள் முன்பு (கடைசியாக) ஸ்ரீபகவானை தரிசிக்க வந்தார்.

உடல்நிலை மிகவும் மோசமாக இருந்ததால், துணைக்கு ஒருவரைப் பெரியப்பா உடனழைத்துச் சென்றிருந்தார்.

ஸ்ரீபகவானைப் பிரதட்சிணம் செய்யவும் அவரது உடல்நிலை ஒத்துழைக்கவில்லை. அழுதுகொண்டே அவர் ஸ்ரீபகவானிடம் பிரியா விடைபெற, ஸ்ரீபகவானின் கண்களும் அப்போது பனித்திருந்தன.

பெரியப்பாவுடன் வந்தவர், ''ஸ்ரீபகவானுக்கு உங்கள் அண்ணன் மேல் அலாதிப்பிரியம் உண்டு என்பதை நேரிலேயே பார்த்துத் தெரிந்து கொண்டேன்!'' என்று என் அப்பாவிடம் கூறினாராம்.

பின்னர் ஒருதரம் பெரியப்பாவைப் பற்றிய பேச்சு எழுந்தபோது-

''கடவுள் எதற்குப் பிரிவையும், சேர்க்கையையும் வைத்திருக்கிறான் என்று யாருக்குத் தெரியும்? எதனால் அவர் சில சமயங்களில் தன்னை ஒளித்துக் கொண்டும், சில சமயங்களில் வெளிப்படுத்திக் கொண்டும் இருக்கிறார் என்பதை யார்தான் அறிவார்...?'' என்று ஸ்ரீபகவான் சொல்லக் கேட்டு, என் அப்பா மௌனமாகி விட்டாராம்.

இதுமட்டும் அல்ல.

என்னுடைய தாத்தாவும் பக்தியே இல்லாமல் இருந்தவர்தானாம். கோவிலுக்குச் செல்லமாட்டாராம். ஆனால் என் பாட்டி அனந்தலட்சுமி அம்மாளோ கோவில்களில் வழிபாடு, பூஜை புனஸ்காரம் என்று பொழுதைக் கழித்தவர்.

இப்படித்தான் அவர் திருவண்ணாமலைக்கு வந்தபோது (ஸ்ரீபகவான் வீட்டை விட்டுக் கிளம்பிய கொஞ்ச காலத்துக்குப் பிறகு) பிராம்மண சுவாமியாகக் காட்சி தந்த ஸ்ரீபகவானை முதன் முதலாக தரிசனம் செய்தார்.

தன் கணவர் கடவுள் பக்தி இல்லாதவராக இருந்தது பற்றி பாட்டிக்கு மிகவும் வருத்தம்.

ஆனால் தாத்தாவுக்கு அடிக்கடி மலேரியா ஜுரம் வருமாம். அப்போது ஜுர வேகத்தில்-

''ரங்கா, அதோபார் சிவபெருமான் ரிஷப வாகனத்தில் காட்சி தருகிறார். சூடம் ஏற்றுகிறார்கள், கும்பிடு!'' என்று என் அப்பாவிடம் கூறுவாராம்.

இதைப்பற்றி என் அப்பா தெரிவித்தபோது, ஒரு கதையைச் சொல்லியிருக்கிறார் ஸ்ரீபகவான்-

''ஒரு நாட்டின் அரசனுக்கு பக்தி இல்லை. ராணி அவனுக்கு நேர்மாறாக இருந்தார். கடவுளிடம், தன் கணவனுக்கு பக்தி கொடுக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்து வந்தார் அந்த ராணி.

ஒருநாள், காலைப் பொழுது விடிந்து வெகுநேர மாகியும் அரசன் எழுந்திருக்காததால், அவனை எழுப்பச் சென்ற ராணி 'ராம் ராம்' என்ற ஒலி ஒலித்துக் கொண்டிருப்பதைக் கேட்டாள். ராம நாமம் எங்கிருந்து வருகிறது என்று ஆராய்ந்து கடைசியில் ராஜாவின் மூச்சுக் காற்றுடன் வருவதை அறிந்து மிகவும் மகிழ்ந்தார்.

மந்திரி முதலியவர்களை அழைத்து, அரசனுக்கு பக்தி வந்துவிட்டதைக் கொண்டாட ஏற்பாடுகள் செய்ய உத்திரவிட்டாளாம் அரசி. பின்னர் அந்தக் கொண்டாட் டத்திற்கான காரணத்தைக் கேட்ட அரசன், தனது ராமபக்தி வெளியில் தெரிந்துவிட்டது குறித்து மிகவும் வருந்தி னானாம். அவனது பக்தியை ஊரறியச் செய்து விட்டதற் காக ராணியும் மன்னிப்புக் கேட்டுக் கொண்டாளாம்.

சிலரது விஷயத்தில் பக்தி மறைவாக இருப்பதுதான் நல்லது'' என்று கூறி முடித்தார் ஸ்ரீபகவான்.

தனது ராஜ்ஜியத்தையே பக்கத்து நாட்டு அரசனுக்குக் கொடுத்துவிட்டுத் தவம் செய்து, 'தான்' என்ற அகந்தையை

வென்ற அரசன் ஒருவனுக்கு, தனது நாடு, பக்கத்து நாடு இரண்டுமே விதிவசத்தால் மீண்டும் கிடைத்த கதையைக் கூறிய ஸ்ரீபகவான்-

தன்னைக் கடவுளின் கருவி என்று நினைத்து வாழ்பவர்களுக்கு எல்லா நலமும் கடவுளின் அருளால் கிடைக்கும், கஷ்டங்கள் எல்லாம் தீரும் என்று பலருக்கும் பலமுறை உபதேசிக்கிறார்.

கடைக்கண் பார்வையினால் கல்மனங்களைக் கரைப்பதும், கதை சொல்லும் திறமையினால் கவலையுற்றோர் நெஞ்சங்களுக்கு ஆறுதல் அளிப்பதும் ஸ்ரீபகவானின் எல்லையற்ற கருணையின் விளைவே ஆகும்.





# 8. சித்து, சித்தர்களின் வேலையில்லை!

ஸ்ரீபகவான் தமது தவ வலிமையினால் எதையும் சாதிக்கும் வல்லமை பெற்றிருந்தாலும், அதனை வெளிக்காட்டிக் கொள்வதில் விருப்பமில்லாதவராய்த் திகழ்ந்தார். அடக்கத்தையே ஆபரணமாக அணிந்து வாழ்ந்தவரல்லவா அவர்...?

ஒருமுறை ஸ்ரீபகவான் என் அப்பாவிடம்-

''ரங்கா, சித்து விளையாடுவதெல்லாம் மிகவும் தவறு. ஒருவன் தனது தவத்தின் ஆரம்ப நிலைகளில் மண்ணைப் பொன்னாக்கும் திறமையையும், மற்றவர்களின் மனதில் உள்ளதை அறியும் ஆற்றலையும் பெறுவது சுலபமே. ஆனால் அதிலேயே ஒருவன் மூழ்கி விட்டால், மேம்பட்ட நிலைமையை அடைய முடியாது'' என்று கூறினாராம்.

ஆனால் என் அப்பாவோ ஸ்ரீபகவானின் பெருமைகளைத் தாம்

உணர்ந்தது போல் மற்றையோரும் உணர வேண்டும் என்று விரும்பி, பல சமயங்களில் பலரையும் ஸ்ரீபகவானின் தரிசனத்திற்காக அழைத்துச் செல்வது வழக்கம்.

ஒரு சமயம், அப்பாவுடன் வந்த நண்பர் ஒருவருக்குப் பெரிய ஏமாற்றம்.

காரணம் என்னவெனில், என் அப்பாவும், அந்த நண்பரும் ஆஸ்ரமத்திற்குள் நுழைந்த சமயத்தில் ஸ்ரீபகவான் வெங்காயம் நறுக்கிக் கொண்டிருந்ததுதான்.

'என்ன இது, ஸ்ரீபகவான் எனப்படுபவர் ஏகாதசியும் அதுவுமாக வெங்காயம் நறுக்கிக் கொண்டிருக்கிறாரே, இன்று முழுவதும் உபவாசம் இருந்து, நாளை துவாதசியன்று காலையிலேயே பூஜைகளை முடித்துச் சாப்பிட்டு விரதத்தை முடிக்க வேண்டும் என்று சாமானியருக்கும் தெரியும்! இப்படி சாப்பாட்டுக்காக வெங்காயத்தை நறுக்கிக் கொண்டிருக்கும் இவர் எப்படி ஸ்ரீபகவான் ஆவார்?' என்று யோசித்தபடியே வந்த நண்பர் வெளியேறிவிட்டார்.

ஸ்ரீபகவான் என்றுமே தம்மை ஞானி என்று வெளிப் படுத்திக் கொள்ள உடன்பட்டதில்லை. எல்லோருடனும் சகஜமாகவும், எளிமையாகவும் பழகுவார்.

ஆசிரமத்தில் அவ்வப்போது வந்து தங்குகிறவர் களில் சிலர் சாப்பாடு கிடைக்கிறதென்று சமையல் கட்டிலேயே இருப்பார்கள். சிலர் போவோர் வருவோரிடம் பணம் கேட்டும், சிலர் ஆஸ்ரமவாசிகளிடையே சண்டை மூட்டிக் கொண்டும் இருப்பர். ஸ்ரீபகவானுக்கு இவையெல்லாம் தெரிந்தும் மௌனமாகவே இருப்பார். தகுந்த சமயத்தில் அவர்களை திருத்தி நல்வழிப் படுத்துவார்.

ஸ்ரீபகவான் வெகு அபூர்வமாகவே தம்முடைய ஞானத்தையும், சக்தியையும் பிறர் அறியச் செய்திருக்கிறார்.

அதுகூட தமக்குப் புகழைச் சேர்த்துக் கொள்வதற்காக அல்ல.

அன்பர் ஒருவர் ஸ்ரீபகவான் முன்னிலையில், சற்று தூரத்தில் அமர்ந்து வடமொழியில் ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். அவருக்கு எழுந்த சந்தேகத்தை, அவர் கேட்காமலே தீர்த்து வைத்தார் ஸ்ரீபகவான்.

1918-இல் ஒரு சமயம் ஸ்கந்தாஸ்ரமத்தில் இருந்த போது - இரண்டு நண்பர்கள் இருந்தார்கள். ஸ்ரீபகவானின் திருக்கரத்தால் விபூதி பிரசாதம் பெற வேண்டும் என்று அவர்கள் விரும்ப, ஸ்ரீபகவானோ விபூதி இருக்கும் இடத்தைக் காட்டி அவர்களையே எடுத்துக் கொள்ளச் சொன்னார். அவர்கள் எத்தனை வற்புறுத்தியும் தமது திருக்கரத்தால் விபூதி பிரசாதம் தர மறுத்துவிட்ட ஸ்ரீபகவான், ''இந்தக் கைக்கும் உங்கள் கைக்கும் வித்தியாசமில்லை. நீங்கள் எடுத்துச் செல்லுங்கள்!'' என்று கூறிவிட, ஏமாற்றத்தில் அவர்கள் விபூதி எடுத்துக் கொள்ளாமலே கிளம்பிவிட்டார்கள்.

அந்த நண்பர்களிடம் பேச்சுக் கொடுத்த என் அப்பா, அவர்களில் ஒருவனுக்கு குஷ்டரோகம் இருந்ததாகவும், கடந்தமுறை வந்தபோது ஸ்ரீபகவானிடமிருந்து விபூதி பிரசாதம் பெற்றுத் தடவியதால் அவன் குணமடைந்ததால், அதே வியாதியுள்ள தன் நண்பனை அழைத்து வந்ததாகவும், ஆனால், ஏனோ ஸ்ரீபகவான் விபூதி பிரசாதமளிக்க மறுத்துவிட்டதாகவும் தெரிந்து கொண்டார்.

ஒவ்வொரு முறையும் விபூதி கொடுத்து வியாதியைக் குணப்படுத்தும் அற்புதப் பிரியராக அறியப்படுவதை

ஸ்ரீபகவான் விரும்பாததே, அவ்வாறு விபூதிப்பிரசாதம் மறுத்ததற்குக் காரணம் என்றும் பின்னர் ஸ்ரீபகவானிடம் இருந்தே அறிந்து கொண்டாராம் அப்பா.

ஒருமுறை தாம் கீதையைப் படித்துக் கொண்டிருந்த போது, மும்மூர்த்திகளும் காட்சி தந்ததையும், திருவண்ணா மலை மீதில் சாப்பாடு தண்ணீரின்றித் தாம் அலைந்து கொண்டிருந்தபோது, மாதா பார்வதிதேவியே ஒரு பானையில் அரிசிக்கஞ்சி கொண்டு வந்து கொடுத்ததையும் ஒரு சாதாரண விஷயம் போல விவரிப்பார்.

தாம் ஒரு ஞானி என்றோ, தம்மால் எதுவும் இயலும் என்றோ ஒருபோதும் ஸ்ரீபகவான் நினைத்ததேயில்லை.

ஆனால் தரிசனம் பண்ண வருபவர்கள் சும்மாவா யிருப்பார்கள்?

ஒரு பெண் ஸ்ரீபகவானை தரிசித்துவிட்டு, அலைபாயும் மனசைக் கட்டுப்படுத்த வழி கேட்டாள்.

ஸ்ரீபகவானும்-

''மனதை ஒரே பாதையில் செலுத்து!'' என்று அறிவுரை கூறினார்.

மகிழ்வுடன் சென்றுவிட்டாள் அந்த மாது.

தவிப்புடன் கேட்டாராம் என் அப்பா-

''ஸ்ரீபகவானே, மனதை ஒருமுகப்படுத்த முடிந்தால் பிறகு வேறு என்ன வேண்டும், அதுவே ஞானம்தானே?'' என்றார்.

ஸ்ரீபகவானோ-

''வேறு என்ன செய்யச் சொல்கிறாய்? இங்கு வந்த உடனே ஞானி ஆக நினைக்கிறார்கள். அது எத்தனை கடினம் என்று அவர்களுக்குப் புரிவதில்லை!'' என்று வருத்தத்துடன் விடை பகர்ந்தாராம்.





## 9. தீட்சிதரைப் போல...

ஸ்ரீபகவான் சில நேரங்களில் மிகுந்த புத்திசாலியாகவும், பல சமயங்களில் ஒன்றுமே தெரியாதவர் போலவும் நடந்து கொள்வார். சில நேரங்கள் ஒரு தந்தையைப் போல் பிறருக்கு உத்தரவு இடுவார். வேறு சில சமயங்களிலோ கள்ளம் கபட மில்லாத ஒரு சிறு குழந்தையைப் போல் நடந்து கொள்வார்.

''அது எப்படி சாத்தியம்?'' என்ற கேள்விக்கு-

''பெண் வேடம் போட்டு நடிக்கின்ற ஒரு மனிதன், தான் ஆண்பிள்ளை என்பதை மறப்ப தில்லையே? அது போலத்தான் ஞானிகள் ஒருபோதும் தாம் யார் என்பதை மறப்பதில்லை!'' என்ற பதில் வந்தது ஸ்ரீபகவானிடமிருந்து.

ஸ்ரீபகவான் குழந்தையைப் போலவும் நடந்து கொள்வார் என்று கூறினேன் அல்லவா...

தாம் சிறு பிராயத்தில் வைகை நதியில் நண்பனுடன் (என் அப்பா)

நீந்தி விளையாடுவது வழக்கம். 1920-இல் ஸ்கந்தாஸ்ரமத்தில் இருந்த சமயத்தில்-

திடீரென்று ''ரங்கா, சின்ன வயசில் நாம ரெண்டு பேரும் வைகையிலே நீச்சலடிச்சது ஞாபகம் இருக்கா உனக்கு? நாளைக்குக் காலையிலே மூன்று மணிக்கெல்லாம் நீந்தப் போகணும். பக்தர் கூடறதுக்கு முன்னாடி...'' என்று ஓர் இளைஞனுக்குரிய உற்சாகத்துடனே கேட்டாராம் ஸ்ரீபகவான்.

மறுநாள் விடிகாலை அப்பாவும், ஸ்ரீபகவானும் பாண்டவ தீர்த்தத்தை நோக்கி நடக்கிறபோது, அப்பாவுக்கு உள்ளூர ஒரு பயம் இருந்து கொண்டேயிருந்ததாம்.

ஏனென்றால் சிறு வயதில் வைகையில் நீந்தும் போது, ஸ்ரீபகவான் நீச்சலடித்தபடியே என் அப்பாவை ஓர் உதை உதைத்தபடியே முன்னேறுவாராம். உதையின் விளைவாக அப்பாவுக்கு உடம்பெல்லாம் வலி புரட்டுமாம்.

பாண்டவ தீர்த்தத்திலும் அதையே மறுபடி நிகழ்த்திக் காட்டினார் ஸ்ரீபகவான். நீச்சலடிக்கும் வேளையில் தமது திருவடியால் என் அப்பாவை உதைக்கத்தான் செய்தார். ஆனால் இது உயிர்போகிற அவஸ்தையாக இல்லாமல், தாமரைப்புஷ்பத்தால் வருடியது போன்று இதமாக இருந்தது அப்பாவுக்கு.

ஞானியாகிய பின்பும் தமது திருவடித் தீண்டல், தம்முடைய பால்ய சினேகிதனுக்குக் கிடைக்க வேண்டும் என்கிற ஸ்ரீபகவானின் திருவுள்ளக் கிடக்கைதான் நீச்சல் விளையாட்டாக அரங்கேறியது போலும்!

அப்பாவும் இந்தப் புதிய அனுபவத்தை ஸ்ரீபக வானிடம் கூற, "இது பழைய உடம்பில்லை" என்றாராம் அவர்.

இன்னொரு சமயம் ஸ்ரீபகவானின் முழங்கால் முதல் திருப்பாதங்கள் வரையில் பிடித்துவிடுகின்ற பாக்கியம் என் அப்பாவுக்குக் கிடைத்தது. சிறு வயதில் சொர சொரப்பாய் இருந்த ஸ்ரீபகவானின் முழங்காலும் திருப்பாதங்களும் இப்போது பட்டுத்துணி போர்த்தியது போன்று மென்மையாக இருந்தன.

இதற்கும் ஸ்ரீபகவானிடமிருந்து பதில் வரத்தான் செய்தது.

"பழைய உடம்பு ஞான அக்னியால் எரிக்கப் பட்டுவிட்டது!"

இன்னொரு முறை நீந்தப் போகும்போது, வழியில் பார்த்த தீட்சிதர் என்பவரிடம்-

"ஓய், உம்ம தக்ளியைத்தானே தேடுகிறீர்?" என்று கேட்க, தீட்சிதருக்கும், என் அப்பாவுக்கும் தூக்கி வாரிப்போட்டது.

"ஆ..மா...ம்... ஆவணி அவிட்டத்திற்குப் பூணூல் செய்வதற்கு நூல் நூற்பதற்காகத் தக்ளியைத் தேடிக் கொண்டிருக்கிறேன்!" என்றாராம் தீட்சிதர் பயபக்தியுடன்.

ஸ்ரீபகவான் நகைப்புடன் கூறினாராம்-

"ஓய், அது ஒன்றும் காணாமற் போகவில்லை. அது இருக்கும் இடத்தில்தான் இருக்கிறது. நீர்தான் அது இல்லாத இடத்தில் தேடிக் கொண்டிருக்கிறீர்..."

பிறகு என் அப்பாவின் பக்கம் திரும்பி-

''ரங்கா, தீட்சிதரைப் போலத்தான் மக்கள் எல்லோரும் உண்மையான (நான்) தன்னை உணர்வதை விட்டுவிட்டு எதையெல்லாமோ தேடிக் கொண்டிருக் கிறார்கள், மன நிம்மதிக்காக. உண்மையான நானை அறிந்து விட்டால் எல்லாம் வெட்ட வெளிச்சமாகி விடும்!'' என்றாராம் ஸ்ரீபகவான்.

''அப்படியானால் ஞானிகள் முக்காலத்தையும் உணர்ந்தவர்களா?'' என்று அப்பா கேட்க-

''முக்காலத்தையும் உணர்தல் ஞானிகளுக்குப் பெரிய விஷயமில்லை. கனவு, விழிப்புநிலை, ஆழ் உறக்கம் என்ற மூன்று நிலைகளிலும் அவர்கள் உலகில் நடப்பது அனைத்தையுமே உணரக் கூடியவர்கள். ஆனால் மனிதனுக்கு என்னென்ன அறிவையோ கொடுத்த கடவுள், எதிர்காலத்தை மட்டும் மறைத்துவிட்டான். சாதாரண மனிதனுக்கு அடுத்த நிமிடம் என்ன நடக்கப் போகிறது என்பது தெரியாது...!'' என்று யதார்த்தமாக பதில் அளித்திருக்கிறார் ஸ்ரீபகவான். நம் உலகைப்போல பல உலகங்கள் இருப்பதாகவும் ஸ்ரீபகவான் எடுத்துக் கூறினாராம்.





# 10. ஸ்ரீபகவானின் தீர்க்க தரிசனம்

சாதாரண மனிதனுக்கு அடுத்த நிமிடம் என்ன நடக்கும் என்பது தெரியாது என்கிற வாக்கியம் எங்கள் குடும்பத்தினருக்கும் பொருந்தக் கூடியதுதானே.

ஆனாலும், காருண்ய மூர்த்தியான ஸ்ரீபகவான் எங்களுடைய வாழ்வில் நடக்கப் போகிற விஷயங்களை பூடகமான முறையில் பல முறை வெளியிட்டிருக்கிறார்.

''ஸ்ரீபகவான் அப்போதே சொன்னதைப் புரிந்து கொள்ளும் ஆற்றல் எனக்குத்தான் இல்லை!'' என் அப்பா (பல சம்பவங்கள் நடந்து முடிந்த பிறகு) கூறியிருக்கிறார்.

என் சகோதரிகள் திருமணத்திற்குப் பத்தாயிரம் ரூபாய் கிடைக்கச் செய்ததும், அப்பாவுக்கு மேனேஜர் வேலை கிடைத்ததும் போதுமே, ஸ்ரீபகவானின் தீர்க்க தரிசனத்தை நாம் புரிந்து கொள்ள.

அப்பாவைப் போலவே, என் அம்மாவும் ஸ்ரீபகவானிடத்தில் மிகுந்த மரியாதையுடையவர்.

அப்போதும், இப்போதும் ஸ்ரீரமணாஸ்ரமத்திற்குள்ளே பெண்கள் தங்குவதற்கு அனுமதியில்லை என்பதால் திருவண்ணாமலையில் ஒரு வீட்டில் தங்கிக் கொண்டு ஸ்ரீபகவானை தினமும் தரிசித்து வந்தார் என் அம்மா.

என் அம்மாவின் பாட்டனார் சிவபெருமானின் அறுபத்து நான்கு திருவிளையாடல்களையும் பதினோரு வடமொழிக் கீர்த்தனைகளாகப் பாடி 'யஜ்வா' என்ற பட்டம் பெற்ற பெரியவர். ஸ்ரீநிவாச யஜ்வா என்ற பெயருடையவர்.

அவருடைய கீர்த்தனைகளையும், கவிக்குஞ்சர பாரதி மற்றும் மதுரகவி ஆகியோரின் பாடல்களை என் அம்மாவைப் பாடச் சொல்லி ஸ்ரீபகவான் கேட்டு மகிழ்வாராம்.

ஒருநாள் அம்மா பாடிக் கொண்டிருந்தபோது, மழை வரும் போல் இருக்கவே, ஸ்ரீபகவானின் திருமுன்பு அமர்ந்திருந்தவர்கள் ஒவ்வொருவராக எழுந்து போகத் தொடங்கினார்கள்.

ஸ்ரீபகவானோ, ''செல்லம்மா, அந்தப் பாட்டைப் பாடு, இந்தப் பாட்டைப் பாடு!'' என்று பாடச் சொல்லிக் கேட்க, என் அம்மாவும் சளைக்காமல் பாடி இருக்கிறார்.

கடைசியில் ஒருவழியாக-

''செல்லம்மா, எல்லோரும் போயாச்சு, மழை வரும் போல் இருக்கிறது. நீயும் சீக்கிரம் கிளம்பு!'' என்று

ஸ்ரீபகவான் உத்தரவு கொடுக்க, அம்மா அவரை நமஸ்கரித்துவிட்டுக் கிளம்பினார்.

அம்மா, தான் தங்கியிருந்த வீட்டிற்குள் அடியெடுத்து வைத்ததுதான் தாமதம், மழை பொத்துக்கொண்டு கொட்டத் தொடங்கிவிட்டது.

ஆனால், மறுநாள் தரிசனத்துக்குச் சென்ற என் அம்மாவை ஸ்ரீபகவான் ஒன்றும் தெரியாதவர் போல-

''செல்லம்மா, நேத்து நீ மழையிலே நனையலியே?'' என்று கேட்டாராம்.

*1925-இல் பிறகு ஒருநாள்-*

''செல்லம்மா, பாட்டுக் கேட்டியே இந்தா?'' என்று சொல்லி, கவிக்குஞ்சர பாரதியாரின் இரண்டு பாடல்களைத் தமது திருக்கரத்தினாலேயே எழுதிக் கொடுத்திருக்கிறார்.

''நாம் எப்போது ஸ்ரீபகவானிடம் பாட்டுக் கேட்டோம்?'' என்று யோசித்தபடியே அந்தப் பாடல்களைப் பணிவுடன் பெற்றுக்கொண்டு ஸ்ரீபகவானை நமஸ்கரித்தார் அம்மா.

''ஆத்துல போய் தினமும் பாடு!'' என்ற அன்புக் கட்டளை வேறு.

அப்போது எங்கள் குடும்பம் தங்கியிருந்த விளாச்சேரிக்குத் திரும்பியது முதல் அம்மா அந்த இரண்டு பாடல்களையும் ஒருநாள் விடாமல் பாடி வந்தார்.

ஸ்ரீபகவான் கொடுத்த இரண்டு பாடல்களில் முதல் பாடல் பிள்ளையார் பெயரில் அமைந்த ''சித்தி விநாயகனே!'' என்று தொடங்கும் பாடல். இரண்டாவது,

ஸ்ரீமுருகனைப் போற்றுகின்ற ''சன்னதி கண்டு கொண்டேன்!'' என்று தொடங்கும் பாடல்.

அம்மா அவற்றைப் பாட ஆரம்பித்த பத்து நாட்களுக்குள் என் தமக்கைகள் பர்வதம், மீனாட்சி இருவரின் திருமணங்களும் நிச்சயமாயின.

ஸ்ரீபகவானின் கருணையும் தீர்க்கதரிசனமும் என் பெற்றோர்களுக்கு - முன்னிலும் அதிகமாக - புரிந்து போனது.

காரணம்-

பருவதம் அக்காவிற்கு அமைந்த வரனின் பெயர் கணபதி, மீனாட்சி அக்காவிற்கு சிவசுப்பிரமணியன் என்ற வரன்.

வரப்போகிற மாப்பிள்ளைகளின் பெயரை, பாடல் வரிகள் மூலம் முன்கூட்டியே தெரிவித்துவிட்ட ஸ்ரீபகவானை எண்ணி உள்ளம் நெகிழ்ந்து போயினர் என் பெற்றோர்கள்.

இது மட்டுமல்ல.

எனது தாயார், பல கவலைகள், கஷ்டங்கள் இருந்தாலும் அதை மறந்துவிட்டு, ஸ்ரீரமணாஸ்ரமத்தில் ஸ்ரீபகவானின் முன்பு மிகுந்த மகிழ்ச்சியுடன் இருப்பாராம். சமையலில் உதவி செய்துகொண்டு, ஸ்ரீபகவான் கேட்கிற பாடல்களைப் பாடிக் கொண்டிருப்பாராம். ஸ்ரீரமணாஸ் ரமத்தை விட்டு மீண்டும் வீடு திரும்பும்போது மறுபடியும் கவலைகள் தொற்றிக் கொள்ளும். ஆனால் ஸ்ரீபகவானிடம் எதையும் கூற மாட்டார். ஸ்ரீபகவான் வேடிக்கையாக, ''செல்லம்மா, இங்கே வர்றப்போ பெரிசா மூட்டையைக்

கொண்டு வர்றா... அதை வெளியில வெச்சுட்டு இங்கே வர்றா... இங்கே சந்தோஷமா இருந்துட்டு, போகும்போது மறுபடியும் மூட்டையைச் சுமந்துண்டு போறா... இங்கே விட்டதை, அப்படியே மறந்துடக் கூடாதோ?'' என்று பலமுறை கூறி இருக்கிறார். வெகு நாட்கள் புரியாமல், கடைசியில்தான் பகவானின் பேச்சின் அர்த்தம் புரிந்தது என்பார்.

எங்கள் வீட்டில் எந்த ஒரு தம்பதிக்கும் பிறக்கின்ற முதலாவது அல்லது இரண்டாவது குழந்தைக்கு வேங்கடரமணன் என்று பெயர் வைக்கிற வழக்கம் கொண்டிருந்தோம்.

அவ்விதமே, பாப்பா என்று அழைக்கப்பட்ட என்னுடைய மூத்த சகோதரி தெய்வ நாயகியின் மூத்த பையனுக்கும், வேங்கடரமணன் என்ற பெயர் வைக்கப் பட்டது.

குழந்தை பார்ப்பவரைக் கவரும் அழகாகவும், துறுதுறுவென்று வளைய வருபவனாகவும் இருந்தான். வீட்டில் எல்லோரும் அக்குழந்தையைக் கொஞ்சி மகிழ்வது வழக்கம்.

திருவண்ணாமலை ஸ்ரீரமணாஸ்ரமத்திற்கு வரும் போதெல்லாம், என் அக்காவின் கையிலிருந்து இறங்கி ஸ்ரீ பகவானிடம் ஓடிவிடுவானாம். அவனைக் கீழே விடாமல் கையிலேயே வைத்துக் கொண்டிருந்தால் ஸ்ரீபகவானையே அவன் பார்த்துக் கொண்டிருப்பானாம்.

ஸ்ரீபகவானோ என் அப்பாவிடம் -

''ரங்கா இவனைப் பார்த்தால் பயமா இருக்கு!'' என்பாராம்.

ஸ்ரீபகவான் ஏன் அவ்வாறு சொன்னார் என்பதை அறிய எங்களுக்கு மேலும் ஐந்து வருட காலம் பிடித்தது.

*1941*-இல் குழந்தை ரமணனுக்கு ஐந்து வயது நிரம்பியது.

வயதை மீறிய புத்திசாலியாய், எல்லோரையும் வசீகரம் செய்பவனாய் வளர்ந்து வந்த ரமணனுக்கு திடீரென்று டைஃபாய்டு ஜுரம் வந்தது.

அவனை மதுரை கோரிப்பாளையத்தில் உள்ள பெரிய ஆஸ்பத்திரியில் சுமார் ஒரு மாத காலம் சிகிச்சைக் காகச் சேர்த்திருந்தார்கள்.

ஒரு நாள் மாலை நேரத்தில், நான் எங்களின் விளாச்சேரி வீட்டில், சற்று ஓய்வாகப் படுத்திருந்தபோது -

வீட்டு வாசலிலிருந்து உள்ளே ஓடி வந்த ரமணன், ஸ்ரீபகவானின் போட்டோவைத் தொடுவதைக் கண்டேன்.

''ரமணா, காலை அலம்பிண்டு வந்து ஸ்ரீபகவானக் கும்பிடு'' என்று அனிச்சையாகக் கூறினேன் நான்.

வீட்டுவாசலில் உள்ள அண்டாவிலிருந்து நீரை மொண்டு கால்களைச் சுத்தம் செய்து கொண்டுதான் யாரும் கூடத்துக்குள்ளே நுழைவது வழக்கம்.

ரமணன் உள்ளே நுழைந்து, எங்கள் வீட்டின் பூஜை அறை வாசலில் உள்ள மூன்றடி உயரமுடைய ஸ்ரீபகவானின் படத்தினைத் தொட்டவுடன் -

''அம்மா ரமணன் வந்தாச்சு!'' என்று குரல் கொடுத்தேன் நான்.

சமையலறையிலிருந்து வியப்பு மேலிடக் கூடத்துக்கு ஓடிவந்த என் அம்மாவும், 'எங்கே ரமணன்?' என்று தேடினார்... ரமணன் அங்கே இருந்தால்தானே, பார்ப்பதற்கு... அவன்தான் ஸ்ரீபகவானின் திருவடியை அடைந்துவிட்டானே...

ஆம்.

குழந்தை ரமணன் உள்ளே நுழைந்து ஸ்ரீபகவானின் படத்தை தொட்டதாக நான் உணர்ந்த ஒரு மணி நேரத்திலேயே மருத்துவமனையிலிருந்து தகவல் வந்து சேர்ந்தது...

ரமணன் இறந்துவிட்டான் என்று.

பிறந்து சில வருடங்களிலே இந்தப்பயல் இறந்து போவான் என்று எங்களுக்குப் பூடகமாக உணர்த்தத்தான், அன்றே ஸ்ரீபகவான் இவனைப் பார்த்தால் பயமாயிருக்கிறது என்று கூறினார் போலும்.

அது மட்டுமல்ல.

குழந்தையின் இழப்பைத்தாங்க முடியாத என் அக்கா பாப்பாவைப் பற்றி ஸ்ரீபகவானிடம் என் அப்பா விண்ணப்பித்தபோது -

"அவன் (ரமணன்) எங்க வந்தான், எங்க போனான்? பாப்பாவைக் கவலைப்படாமல் இருக்கச் சொல்லு, இன்னும் பல குழந்தைகளைப் பெத்துண்டு சந்தோஷமாக இருப்பாள்!" என்று ஆறுதல் கூறி ஆசீர்வதித்தாராம் ஸ்ரீபகவான்.

என் தமக்கை, பாப்பாவிற்கு இன்னொரு ஆசையும் இருந்தது. அதாவது அவள் தன் சிறுவயதில் ஸ்ரீபகவானுடன்

விளையாடி, அவர் கால்களைத் தொட்டுக் கும்பிட்டு மகிழ்ந்திருக்கிறாள். திருமணம் ஆகி, ரமணன் பிறந்தபின் சென்ற போதெல்லாம், ஸ்ரீபகவான் கால்களைத் தொட்டுக் கும்பிட வேண்டும் என்று தணியாத ஆசை. அதை என் தந்தையிடமும் சொல்லி இருக்கிறாள். (அப்போது ஸ்ரீபகவானைத் தொட்டுக் கும்பிடுவது, கால்களைத் தொடுவது என்பதெல்லாம் தவிர்க்கப்பட்டிருந்தது. ஏனெனில், வருவோர் போவோர் எல்லோரும் தொட்டு, அவர் கால்கள் கன்றிப் போயிருந்த காலம்.)

என் தந்தை ஸ்ரீபகவானிடம் பாப்பாவின் ஆசையைச் சொல்லி இருக்கிறார். அன்று மதிய உணவின்போது, குழந்தை ரமணன் ஸ்ரீபகவானிடம் ஓடிச் செல்லவும், ஸ்ரீபகவான் அவனை வாரி எடுத்து, பாப்பாவின் அருகில் வந்து, ''நீ என்ன பெரிய மனுஷியோ? உங்கப்பாகிட்ட கம்ப்ளெயிண்ட் பண்ணினியாமே'' என்றவாறு குழந்தையை அவள் கைகளில் கொடுத்து, தன் கைகளால் அவள் கைகளைத் தொட்டு ஆசிர்வதித்திருக்கிறார். உடலெல்லாம் (ஒரு ஷாக்) மின்சாரம் பாய்ந்தது போல் ஒரு அனுபவம். நடுங்கும் உடலுடன் எதுவும் பேசத் தோன்றாமல், காலைத் தொட்டுக் கும்பிட ஆசைப்பட்ட தனக்கு, ஸ்ரீபகவான் தன் கைகளால் தொட்டு ஆசிர்வாதம் செய்த மகிழ்ச்சியில் திளைத்திருந்தாள்.

அந்த நிகழ்ச்சியை அடிக்கடி எல்லோரிடமும் சொல்லி மகிழ்வாள். என்னே ஸ்ரீபகவானின் கருணை!? எங்கள் ஆறு சகோதரிகளில் அவள் மட்டும்தான் வடக்கே ரிஷிகேசத்திலிருந்து தெற்கே கன்னியாகுமரி வரையிலும், மேற்கே மும்பையிலிருந்து, கிழக்கில் கொல்கொத்தா வரையிலும் பல தலங்களைக் கணவருடன் சுற்றிப் பார்த்து, அறுபதாம் கல்யாணமும் மிக விமரிசையாகக் கொண்டாடி, எல்லாச் செல்வங்களையும் அனுபவித்து,

சுமங்கலியாய் 1992 ஜனவரி 25ஆம் தேதி தன் 72 ஆம் வயதில் ஸ்ரீபகவானின் தாளினில் சேர்ந்தாள்.

ரமணனைப் பற்றிக் கூறியது போல -

என்னுடைய எதிர்கால வாழ்வைப் பற்றியும் முன்கூட்டியே சூசகமாகச் சொல்லியிருக்கிறார் ஸ்ரீபகவான்-

ஸ்ரீபகவான் ஒன்றரை வயசுக் குழந்தையாய் இருந்த என்னைத் தமது மடியில் வைத்துக்கொண்டு அ,ஆ சொல்லிக் கொடுக்க, நானும் அதைத் திருப்பிச் சொல்லியிருக்கிறேன்.

என் அம்மாவிடம் என்னைக் கொடுத்த ஸ்ரீபகவான், ''செல்லம்மா, உன் பொண்ணுக்கு அட்சராப்பியாசம் ஆயாச்சு. இனிமேல் கவலை இல்லை'' என்று கூறி ஆசிர்வதித்தாராம்.

என் பெற்றோரும் நான் ஸ்ரீபகவானின் அனுக் கிரகத்தால் நான் பட்டப் படிப்பெல்லாம் படிப்பேன் என்று நினைத்திருக்கிறார்கள். ஆனால் ஸ்ரீபகவானின் தீர்க்க சிந்தனை பல வருடங்கள் கழித்துத்தான் தெரிய வந்தது எங்களுக்கு.

விளாச்சேரி நடுநிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோது நான் பெரியவளாகிவிட்டதால் ஏழாவதோடு என் பள்ளிப் படிட்'பு நின்றுபோனது.

பதினெட்டாவது வயதில் எனக்குப் பார்த்த வரன் ஒரு லட்சாதிபதி. ஓட்டல், விறகுக்கடை, குதிரை வண்டிகள் என்று பலதரப்பட்ட வியாபாரம் செய்து வந்தவர்.

எனக்கு முன்பு என் அக்காக்கள் எல்லாம் தபால் அதிகாரி, பள்ளி ஆசிரியர் என்பது போல் மாதச்சம்பளம் வாங்குகின்ற நல்ல உத்தியோகஸ்தர்களையே கணவராக

அடைந்திருந்தனர். எனக்கு வந்த வரன் ஒரு வியாபாரியாய் இருந்ததால் என் பெற்றோருக்குச் கொஞ்சம் மன சஞ்சலம்.

எங்கள் குடும்ப வழக்கப்படி, பிரச்சினையை ஸ்ரீபகவானின் தீர்ப்புக்கு விட முடிவு செய்து, ஸ்ரீரமணாஸ்ரமத்துக்குக் கடிதம் எழுதினார் என் தமையனார்.

அப்போதெல்லாம் ஸ்ரீரமணாஸ்ரமத்திற்கு வரும் கடிதங்களுக்கு ஸ்ரீபகவானின் அறிவுரையைப் பெற்று பதில் கடிதம் போடுபவர் ஸ்ரீ நிரஞ்ஜனானந்த ஸ்வாமி அவர்கள்தான்.

''ரங்கா! பதில் கடிதங்கள் எழுதுவதற்குப் பேனாவைத் தபால் கார்டில் வைப்பது மட்டும்தான் எனக்குத் தெரியும். என்ன எழுதப் போகிறேன், என்ன எழுதினேன் என்பதெல்லாம் எனக்குத் தெரியாது. எழுதி முடித்த பின்புதான் அதனை நானே படித்துத் தெரிந்து கொள்வேன். எல்லாம் ஸ்ரீபகவானின் அருள்தான்!'' என்று என் அப்பாவிடம் ஸ்ரீநிரஞ்ஜனானந்த ஸ்வாமி பலமுறை சொல்லியிருக்கிறாராம்.

எனது திருமண விஷயமாக ஸ்ரீரமணாஸ்ரமத்திலிருந்து வந்த பதில் கடிதத்தில், ''அவளுக்குத் தொழில்தான் முக்கியம்!'' என்ற வாசகம் இருந்தது.

இதையே ஸ்ரீபகவானின் உத்தரவாக ஏற்றுக்கொண்டு எனது திருமணத்தை உடனடியாக நடத்தி முடித்தார்கள் என் பெற்றோர்கள். பெரிய வியாபாரியாகவும், (அந்தக் காலத்திலேயே) லட்சாதிபதியாகவும் இருந்த என் கணவர், ஒன்பது வருட மணவாழ்க்கைக்குப் பிறகு இறந்துவிட்டார். அவர் இறக்கும்போது எனக்கென்று எதையும் வைத்து விட்டும் செல்லவில்லை.

நான்கு வயதும், எட்டு வயதும் ஆன இரண்டு பையன்களுடன், சின்ன வயசிலேயே விதவைக் கோலம் வேறு. என்னுடைய உடன் பிறந்தோர் என்னையும் என்னுடைய குழந்தைகளையும் ஆளுக்கு இரண்டு மாதம் வீதம் வைத்துப் பராமரிக்கலாம் என்று முடிவு செய்தார்கள்.

எனக்கோ, என் கணவர் இறந்த துக்கம் ஒருபுறமாக இருந்தாலும், நாம் யாருக்கும் பாரமாக இருக்கக் கூடாது என்ற வைராக்கியத்துடன் இருந்து வந்தேன். அவ்வப்போது தற்கொலை எண்ணம் வேறு தலைதூக்கும். இவ்வாறு நான் எனக்குள்ளே மறுகிக் கொண்டிருந்தபோது ஒரு நாள், ''உனக்குத்தான் ஸ்ரீபகவான் மூலமாகவே அட்சராப்பியாசம் ஆகியிருக்கே...!'' என்று யாரோ கூறுவது போல உணர்ந்தேன்.

''மேற்கொண்டு படித்தால் என்ன...?'' என்ற எனது யோசனையை என் அப்பாவும், சகோதரர்களும் அரை மனசுடன்தான் ஏற்றுக் கொண்டார்கள். என்னுடைய முதல் மகனை என் மைத்துனர் திரு.கஸ்தூரிரங்கய்யரும், என் இரண்டாவது மகனை என் அக்கா(பாப்பா)வும் பார்த்துக் கொள்ளச் சம்மதித்தார்கள். என் அண்ணா மற்றும் அக்கா புருஷனிடம் பாடம் கற்றுக்கொண்டு (பிரைவேட்டாக) பள்ளியிறுதி வகுப்புக்கான பரீட்சையில் தேர்வு பெற்றேன்.

பிறகு மதுரை கேப்ரன் ஹாலில் இரண்டு வருஷங்கள் ஆசிரியைக்கான பயிற்சி பெற்று, பெரியகுளம் பிரும்ம ஞான மந்திரத்தில் ஆசிரியையாகப் பணிபுரியத் தொடங்கினேன்.

''அன்றே அட்சராப்பியாசம் ஆச்சுன்னு ஸ்ரீபகவான் சொன்னதையும், அவளுக்குத் தொழில்தான் முக்கியம்னு (கல்யாணத்திற்கு ஆசி வேண்டியபோது) பதில்

வந்ததையும் என்னாலே புரிஞ்சுக்க முடியலையே. இவளே வேலை செய்து குடும்பத்தைப் பார்த்துக்கும்படி ஆயிடுச்சே...!'' என்று அப்பா அடிக்கடி அங்கலாய்ப்பது வழக்கமாயிற்று.

இவை மட்டும் அல்ல.

ஸ்ரீபகவானின் தீர்க்கதரிசனமும், எங்கள் குடும்பத்தின் மீதான ஸ்ரீபகவானின் காருண்யமும் இணை சேர்ந்து உதவிய நிகழ்ச்சிகளும் உண்டு.

என் தங்கை அழகம்மாளுக்குப் பலமுறை பார்த்தும் சரியான வரன் அமையாததால், வழக்கம் போல் ஸ்ரீரமணாஸ்ரமத்திற்கு அனுமதி கேட்டு எழுதியதற்கு ஸ்ரீபகவானின் உத்திரவாக விரைவிலேயே குருநாதன் என்ற வரன் அமைந்து, திருமணமும் நல்லபடி நடந்து, ஒரு மகன், ஒரு மகளைப் பெற்று, பேரன், பேத்தி எடுத்து, ஆனந்தமாக வாழ்ந்து கொண்டிருக்கிறார். இப்போதும் ஸ்ரீரமணாஸ்ரமத்திற்கு அடிக்கடி சென்று தியானித்துவிட்டு வருகின்ற என் தங்கை அழகம்மாவுக்கு அந்தப் பெயரை வைத்ததே ஸ்ரீபகவான்தான் என்பதை இந்த நூலில் ஏற்கெனவே கண்டிருக்கிறோம். ஸ்ரீமதி அழகம்மாள் குருநாதன் 2006 மார்ச் 4-ஆம் தேதி ஸ்ரீபகவானின் திருவடியில் சேர்ந்தார்.





## 11. இடுக்கண் களைவதில் இணையற்றவர்

*1933*-ஆம் வருடம் நடந்த ஒரு நிகழ்ச்சியைக் கூறுகிறேன்.

என்னுடைய சிறிய அண்ணன் வேங்கடரமணன், நாங்கள் விளாச்சேரியில் வசித்த காலத்தில், வெளியே சென்றுவிட்டு வீடு திரும்பும்போது, பாம்புக்கடிக்கு ஆளாகி, வீட்டில் நுழையும் போதே ''பாம்பு... பாம்பு...'' என்று அரற்றியபடி தொப்பென்று கீழே மயங்கி விழுந்துவிட்டார்.

அக்கம்பக்கத்தார் அனைவரும் என் அண்ணன் பிழைப்பது துர்லபம் என்று கூறிவிட

ஸ்ரீபகவானிடம் தளராத நம்பிக்கை கொண்டிருந்த என் தாயோ, எனது வீட்டில் எப்போதும் கம்பீரமாகக் கூடத்தில் காட்சி அளிக்கும் ஸ்ரீபகவானது புகைப் படத்தின் முன்பு என் அண்ணனைக் கிடத்திவிட்டுக் கண்ணீருடன் மனமுருகிப் பிரார்த்திக்க ஆரம்பித்து விட்டாள்.

''பகவானே, என்பையன் பதினேழே வயசில் போய்விடுவானே என்று நான் பயப்படலை. ஸ்ரீபகவானின் பெயரையே வைத்துக் கூப்பிட்டுக் கொண்டிருக்கிற இந்தப் பையன் செத்துப்போனால், அந்தப் பெயருக்கல்லவா களங்கம் வரும்? - என்று அம்மா தன்னை மறந்து ஸ்ரீபகவானை வேண்டவும் -

''விஷத்தை நான் வாங்கிக் கொள்கிறேன்...!'' என்ற குரல் அசரீரி போலக் கேட்டதாம். அம்மா, அப்பா தவிர அங்கிருந்த மற்றவர்களும் அந்தக் குரலைக் கேட்டிருக் கிறார்கள்.

அவ்வளவுதான்.

அம்மாவுக்கு நம்பிக்கை வந்துவிட்டது.

''என் பிள்ளை பிழைத்துவிடுவான், ஸ்ரீபகவானே எனக்கு பதிலளித்துவிட்டார்...'' என்று சொல்லி மகிழ்ந்தாளாம் என் அம்மா.

''பிள்ளை உயிருடன் இருக்க வேண்டுமானால் பாம்புக் கடிபட்ட காலை ஆப்பரேஷன் மூலம் எடுத்துவிட வேண்டும்!'' என்று எச்சரித்தாராம் ஒரு டாகடர்.

அன்று ராத்திரி முழுக்க நினைவின்றிப் படுத்திருந்த என் அண்ணன், மறுநாள் காலையில்தான் கண்விழித்து எழுந்தாராம்.

எழுந்த அண்ணன், தன் கனவில் ஸ்ரீபகவான் வந்து காலைத் தடவிக் கொடுத்து, 'சரியாகிவிடும்' என்று கூறியதாகச் சொன்னார். அவ்வாறே, எவ்விதப் பின்விளைவுகளும் இன்றிப் பிழைத்த என் அண்ணன் தமது 72 வயது வரை நிறை வாழ்வு வாழ்ந்து, 1987-இல் பகவான் ஸ்ரீரமணரின் திருவடியை அடைந்தார்.

*என் அண்ணனைப் பாம்பு கடித்த தினத்தன்று அசரீரி கேட்டதையும், அவரது கனவில் ஸ்ரீபகவானே எழுந்தருளி தைரியம் அளித்துப் பிழைக்க வைத்ததையும், எங்கள் குடும்ப வழக்கப்படி, கடிதம் மூலம் ஸ்ரீரமணாஸ்ரமத் துக்குத் தெரியப்படுத்தினார் எங்களின் பெரிய அண்ணன் திரு. கிருஷ்ணசாமி.*

*அந்தக் கடிதத்திற்கு 7.7.1933 தேதியிட்டு ஸ்ரீரமணாஸ் ரமத்திலிருந்து பதிலாக வந்த கடிதத்தை இன்றும் நாங்கள் ஒரு பொக்கிஷமாகவே பாதுகாத்து வருகிறோம்.*

*ஸ்ரீரமணாசிரமக் கடித வாசகங்களை அப்படியே இங்கு தருவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.*

*7.7.33*

SRI RAMANA ASRAM
THIRUVANNAMALAI, S.INDIA.

அன்புள்ள கிருஷ்ணசாமிக்கு, உன் கார்டு கிடைத்தது, ஸ்ரீபகவானால் பார்வையிடப்பட்டது.

ஸ்ரீபகவானை நம்பியவர்கள் கைவிடப்படாரென்பது தெரியாதவர்கள் கூடத் தெரிந்து கொள்ளலாம். ஸ்ரீபகவானின் அனுக்கிரகத்தால் சீக்கிரத்தில் புண்கூட ஆறிவிடும். ஆசிரம பக்தர்கள் எல்லோரும் உன் கடித சமாச்சாரத்தைக் கேட்டு ஆச்சரியப்பட்டு ஸ்ரீபகவானின் பெருமையையும், அருமை யையும் கொண்டாடினார்கள்.

உன் தகப்பனார், தாயார் முதலானோர் சௌக்கியங் களுக்கும் சி.ரமணனின் உடல் ஆரோக்கியத்திற்கும் எழுதவும். ஸ்ரீபகவான் சௌக்கியம்.

*நிரஞ்ஜனானந்த சுவாமி*
*ஸர்வாதிகாரி*
*(மேனேஜர்)*

1930-இல் அக்கா அனந்தலட்சுமி வசதியான குடும்பத்தில் வாழ்க்கைப்பட்டாள். அவள் கணவர் போஸ்ட்மாஸ்டராக வேலை பார்த்தார். பரம்பரைப் பணக்காரரும் கூட.

அக்காவும், அவள் கணவருமாக ஒரு சமயம் ஸ்ரீபகவானை தரிசிக்கச் சென்றிருந்தார்கள்.

அதுசமயம், என் அக்காவின் கணவர், ரங்கனின் (என் அப்பாவின்) மாப்பிள்ளை என்று கூறிக் கொள்ளாமல், தன்னை ஒரு போஸ்ட்மாஸ்டர் என்றும் (அந்தக் காலத்தில் அது ஒரு பெரிய உத்தியோகம்) மதுரைக்கு அருகில் உள்ள ஊரான அச்சம்பத்து என்ற கிராமத்தில் பாதி அவர் குடும்பத்தைச் சேர்ந்தது என்றும் கூறிவிட்டு ஸ்ரீபகவானை வணங்கினாராம்.

ஸ்ரீபகவானோ நிரஞ்ஜனானந்த சுவாமியை அழைத்து-

''ரங்கன் இல்லே ரங்கன், அவன் பெண்ணும் மாப்பிள்ளையும் வந்திருக்கா. அவாளுக்குச் சாப்பாடு போட்டு வேண்டியதைச் செய்ய ஏற்பாடு செய்..!'' என்றாராம்.

எதிரே நிற்பவர் பெரும்பணக்காரர் என்றாலும் அதனைப் பொருட்படுத்தாமல், தம்முடைய பாலிய சிநேகிதத்தை இன்றும் ஸ்ரீபகவான் தொடர்வதை நினைத்து நினைத்து மகிழ்ந்து போனார் என் அக்கா அனந்தலட்சுமி. அதனை எங்கள் பெற்றோரிடமும் தெரிவித்தாள் அவள்.

இடுக்கண் களைவதாம் நட்பு என்ற பொய்யா மொழிக்கேற்ப ஸ்ரீபகவான் -

எங்கள் குடும்பத்தினரின் சிரமங்களையும், துயரங்களையும் குறைத்தும் தீர்த்தும் அருள் புரிந்து -

தம்முடைய நண்பராகிய - என் தகப்பனாரின் வாழ்நாள் துணையாக ஸ்ரீபகவான் விளங்கி வருவதற்கு அனேக உதாரணங்களைச் சொல்லிக் கொண்டே போகலாம்.

என்னுடைய மூன்றாவது அக்கா மீனாட்சி தனது முதல் பிரசவத்திற்குப் பிறகு இருட்டில் எதையோ பார்த்துவிட்டு பயந்துபோய் சித்தம் கலங்கியவளாய் வளைய வந்தாள். தன்னுடைய பச்சிளம் குழந்தையையும் கவனித்துக் கொள்ளாமல், உற்றார் உறவினர் யாரையும் அடையாளம் புரிந்து கொள்ளாமல் இருந்த மீனாட்சி அக்காவைப் பற்றி ஸ்ரீரமணாஸ்ரமத்திற்கு எழுதினார் என் அண்ணா.

ஸ்ரீரமணப்பிரசாதமாக விபூதி குங்குமமும், அக்கா குணமாகிவிடுவாள் என்ற ஆறுதல் வாசகம் அடங்கிய கடிதமும் வந்தன.

அதுபோலவே மீனாட்சி அக்கா விரைவாகத் தேறிவிட்டாள். பிறந்தவுடனேயே தாயாரின் கவனிப்பு இல்லாததாலோ என்னவோ, அக்காவின் முதல் குழந்தை இறந்துவிட்டது. அதன் பிறகு மூன்று பிள்ளைகள் மற்றும் மூன்று பெண்கள் என்று நிறைவான குழந்தைச் செல்வத்தைப் பெற்று வளர்த்து நிறை வாழ்வு வாழ்ந்து, தனது 60-வது வயதில் சுமங்கலியாகவே இறைவனடி சேர்ந்தாள் என் அக்கா.

மீனாட்சி அக்காவின் மூத்த பிள்ளை முத்துசாமிக்கு, சிறுவயதிலேயே வயிற்றில் கட்டி உண்டாகி மிகவும் சிரமம் கொடுத்தது. கட்டியால் அவதிப்படும் தன் பிள்ளையை அழைத்துக் கொண்டு, எங்கள் பெற்றோரையும் துணைக்கு அழைத்துக் கொண்டு 1938-இல் ஸ்ரீரமணாஸ்ரமத்திற்குச் சென்றாள் மீனாட்சி அக்கா.

அச்சமயம், எங்கள் பெரிய அண்ணாவின் மகள் ஜெயம் ஸ்ரீபகவானுடனேயே நன்கு பேசிக் கொண்டும், விளையாடிக் கொண்டும், சுலோகங்கள் சொல்லி எல்லோரையும் மகிழ்வித்துக் கொண்டும் இருந்தாள். ஆனால் தன் மகன் முத்துசாமியோ ஸ்ரீபகவானிடம் செல்லாமல் ஒதுங்கியே இருப்பதைக் கண்டு மீனாட்சி அக்கா சற்றே வருத்தமுற்றாள்.

பின்னர் ஸ்ரீபகவானே முத்துசாமியை அருகில் அழைத்து, ''விட்டல், விட்டல், பாண்டுரங்கவிட்டல்னு சொல்லு!'' என்று. சிறுவன் முத்துசாமி எப்போதும் சொல்லுகிற நாமாக்களைச் சொல்லச் சொன்னார். ஓர் ஆரஞ்சுப்பழத்தை உரித்து ஸ்ரீபகவானே தமது திருக் கரங்களால் அவனுக்கு ஊட்டியும் விட்டார்.

மீனாட்சி அக்காவுக்கோ தாளமுடியாத மகிழ்ச்சி.

ஸ்ரீபகவானே மகாபிரசாதத்தை ஊட்டிவிட்டால் பிறகு கேட்பானேன்?

முத்துசாமியின் வயிற்றில் உண்டாகி இருந்த கட்டியும் கரைந்தது. உடலும் தேறியது.

நன்றாகப் படித்து பட்டம் பெற்று, கனராவங்கியில் மானேஜராகப் பணிபுரிந்து ஒய்வும் பெற்றுவிட்ட முத்துசாமி, தற்போது மதுரையில் வசிக்கிறார்.

அது மட்டுமா...?

என்னுடைய நான்காவது அக்கா பாப்பாவின் பிள்ளை ரமணன் (ஆஸ்பத்திரியில் இருந்தபோதே வீட்டில் நுழைந்து ஸ்ரீபகவானின் படத்தை வணங்கியதாகத் தோற்றம் அளித்த குழந்தை) மறைவிற்குப் பிறகு,

அவளுக்கு மேலும் மூன்று குழந்தைகள் பிறந்து இறந்து விட்டன. இதனால் பாப்பா அக்காவும் சித்தம் கலங்கி இருந்தாள்.

அவளுக்குச் சாப்பிட எதைக் கொடுத்தாலும், தனது (இறந்துபோன) குழந்தைகளுக்கு என்று அந்த உணவுப் பண்டத்தை நான்குபங்காகப் பிரித்து வைத்துவிட்டு, தான் எதையும் சாப்பிடாமலே இருப்பாள்.

ஸ்ரீரமணாஸ்ரமத்திற்கு எழுதியதில், ஸ்ரீபகவானின் ஆசி மொழிகளோடு, விபூதி குங்குமப் பிரசாதங்களும் கிடைக்கப் பெற்றோம்.

விரைவிலேயே பூரண குணம் அடைந்த பாப்பா அக்காவிற்கு இன்னும் ஒரு சோதனை வந்தது. அந்தச் சோதனையைக் கடப்பதற்கும் கை கொடுத்து உதவியவர் ஸ்ரீபகவானே என்பதைச் சொல்ல வேண்டுமா என்ன?

1940 ஆம் வருடம், பாப்பாவின் கணவருக்கு க்ஷய ரோகம் (T.B.) வந்துவிட்டது. அப்போது அவருக்கு வயது இருபத்து நான்கு மட்டுமே. க்ஷய ரோகத்திற்கு மருந்து எதுவும் கண்டுபிடிக்கப்படாத காலம் அது. அந்த வியாதி வந்துவிட்டாலே மரணம்தான் முடிவு என்று எல்லோரும் நினைத்த காலம் அது.

ஸ்ரீபகவானின் திருவருளைத் தவிர வேறு மருந்தையே அறியாத என் பெற்றோரும் அவரது திருவடிகளையே தஞ்சமடைந்தனர்.

ஸ்ரீபகவான் பிரசாதம் அளித்ததுடன், மாப்பிள்ளையை (பாப்பாவின் கணவரை) திண்டுக்கல்லுக்குக் கூட்டிக் கொண்டுபோய் நான்கு மாதகாலம் நல்ல உணவும்,

பால்-பழங்களும் அவருக்குக் கொடுத்து வரும்படி அறிவுரை கூறி ஆசிர்வதித்தார்.

ஸ்ரீபகவான் கூறியபடியே செய்ததில் பூரணகுண மடைந்த பாப்பா அக்காவின் கணவர் (திரு. சுப்பிர மணியன்) பின்னர் யூகோ வங்கியில் மேனேஜராகப் பணிபுரிந்து, நல்லபடி ஓய்வு பெற்று, தமது எண்பதாவது வயதில் (1996-ல்) சிவபதம் அடைந்தார்.

என் அப்பாவையும் - அவரது பந்துமித்திரர்கள் என்று தம்மைத் தஞ்சமடைந்த அனைவரையும் தாங்கி நின்று, தக்க சமயத்தில் உதவிகள் புரிந்து பரிபூரண அருள் புரிந்த கண்கண்ட தெய்வமாகிய ஸ்ரீபகவானின் சிநேகிதம் கிடைத்ததற்கு என் அப்பாவும், அவரைச் சேர்ந்த நாங்கள் எல்லோருமே மிகவும் பெருமை கொள்கிறோம்.

ஸ்ரீபகவானின் விசேஷ கடாட்சம் கிடைத்ததை எங்கள் பாக்கியமாகவே எண்ணி மகிழ்கிறோம்.

'அர்ஜுன் - ஸ்ரீகிருஷ்ண' நட்புக்கு இணையாக விளங்கியது 'என் அப்பா - ஸ்ரீரமணரின்' நட்பு என்று ஒப்பிடலாம்.

எப்படி ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் துணையின்றி அர்ஜுனன் மகாபாரதப் போரில் எந்த ஒரு வெற்றியையும் பெற்றிருக்க முடியாதோ -

அப்படியேதான் -

பகவான் ஸ்ரீரமணனின் அருளும், வழிகாட்டுதல் களும் இல்லை எனில், எங்கள் அப்பாவும், அவரைச் சேர்ந்த நாங்களும் உலக வாழ்க்கை என்ற இந்த மகாபாரத யுத்தத்தில் ஒருபோதும் வெற்றி பெற்றிருக்க முடியாது என்று தோன்றுகிறது.



## 12. தாயார் சுவாமி

முருகப் பெருமான் தன்னுடைய தகப்பனாராகிய ஈசுவரனுக்கு பிரணவ மந்திர அர்த்தத்தை உபதேசித்து சுவாமிநாதன் என்ற திருப்பெயருடன் தகப்பன் சுவாமியாகப் பெருமை பெற்றது போலவே-

ஸ்ரீபகவான் தமது தாயார் அழகம்மா அம்மாளுக்கும் நேரிடையாகவும், மறைமுகமாகவும், கடிந்து கொண்டும், கண்டுகொள்ளாமலும் தத்துவோபதேசங்கள் புரிந்திருக்கிறார்.

அழகம்மா அம்மா தம்முடைய திருக்குமாரரான பகவான் ஸ்ரீரமணருடன் விருபாக்ஷி குகையிலும் பின்னர் ஸ்ரீஸ்கந்தாஸ்ரமத்திலும் தங்கியிருந்தபோது அவருக்குக் குல வழக்கப்படியான மடி, ஆசாரம் இவற்றோடு உலகாயுத ஆசாபாசங்களும் இருக்கவே செய்தன.

தம்முடைய மகன் ஓர் ஈசுவர அவதாரம் என்று புரிந்து கொள்ள அழகம்மா அம்மாளுக்குக் கொஞ்ச காலம் பிடித்தது.

ஸ்ரீபகவானின் தகப்பனார் சிறு வயதிலேயே சிவலோகம் அடைந்து

விட்டதால், அந்தக் கால வழக்கப் படி அழகம்மா அம்மாள் தலைமுடி விலக்கி, வெள்ளை யாடை அணிந்து வந்தார். சாப்பிடும் உணவில் வெங்காயம், பூண்டு, முருங்கைக்காய் ஆகியவற்றைச் சேர்த்துக் கொள்ளமாட்டார்.

தாம் உண்பதற்கு முன்பாக, (ஸ்ரீபகவானைத் தரிசிக்க வரும்) பிராமணர் அல்லாதாருக்கு உணவு பரிமாற நேரிட்டால், அன்றைய தினம் முழுவதும் உணவு உண்ணாமல் பட்டினி கிடப்பார்.

இப்படிப்பட்ட எண்ணங்களையும், அவற்றின் விளைவான செயல்களையும் ஸ்ரீபகவான் தம் தாயாரின் சிந்தனையிலிருந்தே படிப்படியாக நீக்கிவிட்டார்.

நான் என்ற உணர்வை நீக்கிவிட்டால் பேதங்கள் இல்லாமல் போய்விடும். வாழ்வுநெறி எளிதாகிவிடும்.

ஆனால் அந்த 'நான்' போவதும், ஆசாபாசங்கள் அறுவதும் அத்தனை சுலபமான விஷயங்களா என்ன?

தம் தாயாரை அவ்வப்போது கேலிப்பேச்சுப் பேசியும், நேரிடையாகவே எடுத்துச் சொல்லியும், 'நானை' நீக்கிப் பக்குவம் அடையச் செய்திருக்கிறார் ஸ்ரீபகவான்.

பிராமண வீடுகளில் அப்பளம் செய்வதற்குப் பிரண்டைச்சாறு கலந்து செய்வார்கள். இதனால் அப்பளத்தின் சுவை அதிகமாய்த் தெரியும்.

ஸ்கந்தாஸ்ரமத்தில் இருந்தபோது, மலையில் ஏராளமாகப் பிரண்டை வளர்ந்திருப்பதைக் கண்ட அழகம்மா அம்மாளுக்கு, ஸ்ரீபகவான் சிறுவயதில் அப்பளத்தை விருப்பமாகச் சாப்பிடுவது நினைவுக்கு வந்தது. (சிறுவயதில் ஸ்ரீபகவான் சமையல் செய்யும் போதும், அப்பளம் தயாரிக்கும் போதும் தம் தாயாருக்கு உதவுவது வழக்கமாம்)

அப்பளம் நினைவு வந்தவுடன் -

''அப்பளம் இட்டுத்தரட்டுமா...?'' என்று அழகம்மா அம்மாள் கேட்கவும் -

''அப்பளம் இட்டுப் பாரு, அத்தைச் சாப்பிட்டு உன் ஆசையைத் தீரு...'' என்று பாட்டாகவே பாடிவிட்டாராம் ஸ்ரீபகவான்.

''நான் யார்...?'' என்பதை அறியும் விதமாக அப்பளம் இட வேண்டும் என்று, ஒரு சாதாரண விஷயத்தை வேதாந்தக் கருத்துக்கள் அமைந்த பாட்டாக ஸ்ரீபகவான் பாடியதைக் கேட்கவும் ரொம்பவும் வெட்கமாகிவிட்டதாக என் தந்தையிடம் பின்னர் கூறினாராம் அழகம்மா அம்மாள். மேலும் -

''பெத்த பிள்ளை ஐம்புலன்களையும் அடக்கிக் கோவணாண்டியாக மாறி உபதேசிக்கிறபோது, தகப்பன் சாமி முருகனின் ஞாபகம்தான் வந்தது'' என்றாராம் என் அப்பாவிடம்.

வேறொரு நாள் -

''குட்டிக்கத்திரிக்காயாகக் கிடைத்தால் முழுசு முழுசாக அதைக் கறி பண்ணலாமே?'' என்று கேட்ட அம்மாவிடம்

''இந்த ஆண்டிகிட்டே போய் அதெல்லாம் கேக்கறியே...?'' என்று அங்கலாய்த்தாராம் ஸ்ரீபகவான்.

அன்று சாயந்திரமே ஆச்சரியம் ஒன்று நிகழ்ந்தது.

''தோட்டத்திலே முதலில் காய்த்ததை ஸ்ரீபக வானுக்குக் கொண்டு வரலாமேன்னு எடுத்து வந்தேன்,'' என்று சொல்லியபடி ஒரு பக்தர் ஒரு கூடை நிறையப் பிஞ்சுக் கத்திரிக்காய் கொண்டு வந்து சமர்ப்பித்தாராம்.

ஸ்ரீபகவானோ -

''அம்மா, உனக்கு மந்திரம் கூடத் தெரியுமா? என்ன மந்திரம் போட்டியோ, காலையிலே கேட்டதுக்கு

மாலையில் கூடை நிறையக் கத்திரிக்காய். இஷ்டம்போல் சமைத்துச் சாப்பிடும்மா...!'' என்று தமாஷ் செய்தாராம்.

சிலவகை ஆசைகளை, போதும் போதும் என்னும் அளவுக்குத் தீனி போட்டுத்தான் களைய வேண்டும் என்று ஸ்ரீபகவான் நினைத்திருப்பார் போலும்.

வேறொரு சமயத்தில் -

அழகம்மா அம்மாளும், ஸ்ரீபகவானும் மட்டுமே இருக்கிற சமயத்தில், திடீரென்று ஸ்ரீபகவான் இருக்கிற இடத்தில் திருச்சுழி லிங்கம், இரண்டு பக்கமும் விளக்கெரிய ஜெகஜ்ஜோதியாகக் காட்சி தந்ததாம். பயந்துபோன அழகம்மா அம்மாள் ஒருமுறை தமது கண்களைத் துடைத்துக் கொண்டு கூர்ந்து கவனித்தாலும் அதே லிங்கம்தான் தெரிந்ததாம். கிட்டே போய்த் தொட்டுப் பார்க்கலாம் என்று தொடப் போனால் ஸ்ரீபகவானே மீண்டும் காட்சி தந்திருக்கிறார்.

அப்போது பிரமிப்பிலும், திகைப்பிலும் உறைந்து போன தம் தாயாருக்கு வேறொரு சமயத்தில் -

தமது உடல் முழுவதும் பாம்புகள் சுற்றிக் கொண்டிருக்க, தலைமீது ஒரு பாம்பு படமெடுத்து நிற்க, பரமசிவமாகக் காட்சி தந்தாராம் பகவான்.

ஸ்ரீகிருஷ்ணபகவான் பிறந்தவுடனே தம்முடைய தாய் தேவகிக்கும், தகப்பானர் வஸுதேவருக்கும் ஸ்ரீமகாவிஷ்ணுவாகப் பஞ்சாயுதங்களுடன் காட்சியளித்தது போல் -

தம்மைப் பெற்ற தாயாருக்கு ஈசுவர தரிசனம் அருளிய ஸ்ரீபகவானைத் திருமகனாகத் தமது கருவினில் சுமக்க அழகம்மா அம்மாள் என்ன தவம் செய்தாரோ என்றுதான் நினைக்கத் தோன்றுகிறது.





## 13. நயத்தக்க நாகரிகம்

வேண்டியவரோ, வேண்டாதவரோ, தமக்கு விஷத்தைக் கொடுத்தால்கூட அதை ஏற்க மறுத்து, அவ்வாறு கொடுப்பவரின் முகம் கோணச் செய்வது நல்லவர்க்கு அழகில்லை என்பது தெய்வப் புலவர் திருவள்ளுவரின் வாக்காகும்.

''பெயக்கண்டும் நஞ்சுண்(டு)
அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்'' -

என்ற திருக்குறளுக்கு உதாரண புருஷராக ஸ்ரீபகவான் திகழ்ந்த ஒரு சில சம்பவங்களும் நடக்கத்தான் செய்தன.

ஸ்கந்தாஸ்ரமத்தில் இருந்தபோது ஒரு பக்தர் ஸ்ரீபகவானுக்கு தினந்தோறும் கஞ்சா கொண்டு வந்து கொடுப்பாராம். ஸ்ரீபகவானும் அதனை, அந்த பக்தரின் மனம் கோணாமல் இருப்பதற்காக சாப்பிடுவது உண்டாம்.

''ரங்கா, ஒரு நாள் அந்த பக்தர் வந்து ஏகப்பட்ட கஞ்சாவைக் கொடுத்துவிட்டார். இதுவும் அதை அப்படியே சாப்பிட்டுவிட்டது. (அம்மா, ஸ்ரீபகவானை, இது, அது அல்லது ஸ்ரீபகவான் என்று சமயத்திற்குத் தோன்றியபடி அழைப்பது வழக்கம்). இதுவே வேறு யாராவது தின்றிருந்தால் அவர் இறந்து விட்டிருப்பார். ஸ்ரீபகவான் அதைத் தின்றுவிட்டு அன்று பூராவும் சிவந்த கண்களுடன் உட்கார்ந்திருந்தது. எனக்கு ஒரே கவலையாகி விட்டது...!'' என்று என் அப்பாவிடம் அழகம்மா அம்மாள் புகார் கூறினார், உரிமையோடு.

உடனே என் அப்பாவும் ஸ்ரீபகவானிடம் சென்று ''ஏன் கஞ்சா எல்லாம் வாங்கிச் சாப்பிடுகிறீர்கள். வேண்டாம் என்று மறுத்துவிடுவதுதானே...?'' என்று கேட்கவும்,

''எப்படி மறுக்க முடியும்? பக்தர்கள் கொடுப்பது எல்லாவற்றையும் சாப்பிடத்தானே வேண்டும்?'' என்று ஸ்ரீபகவான் சிரித்துக்கொண்டே கூறினாராம்.

ஸ்ரீபகவான் அப்படிச் சொன்னாலும், அழகம்மா அம்மாளின் மனம் வருத்தப்படாமல் இருக்க ஏதாவது செய்ய வேண்டும் என்று நினைத்த என் அப்பா, கஞ்சா கொண்டு வந்து கொடுக்கும் அந்த பக்தரைப் பார்த்து இனிமேல் அவ்வாறு கொடுக்கக்கூடாது என்று தீர்மானமாகக் கூறிவிட்டாராம்.

பிறிதொரு சமயம் -

ஸ்ரீபகவானின் பற்களில் ஒன்று கறுப்பாக ஆகிவிட்டதையும், அவரது வயிறு பாதிப்புக்குள்ளாகி யிருப்பதையும் கண்டு, - தன்னை விடவும் ஒரு வயது

சிறியவரான ஸ்ரீபகவானுக்கு இத்தகை நிலைமை எதனால் வந்தது என்று ஆதங்கப்பட்டு, அதை ஸ்ரீபகவானிடமே கேட்டுவிட்டார்.

அதற்கு ஸ்ரீபகவானின் பதில் என்ன தெரியுமா?

''அது தெரியாதா உனக்கு? ஒரு பக்தர், இதை (தம்மை) நிஜச்சாமியா, போலிச்சாமியா என்று பரீட்சித்துப் பார்க்க விஷம் கொடுத்தார். இதுவும், விஷம்னு சொல்லிக் கொடுத்தாலும் குடிக்கும்னு சொல்லிக் குடிச்சுடுத்து. விஷம் பல்லைப் பதம் பார்த்துடுத்து... அவ்வளவுதான்...!''

பரமசிவனாவது ஆலகால விஷத்தைத் தமது தொண்டையோடு நிறுத்திக் கொண்டார். ஸ்ரீபகவானோ தமது வயிற்றிலேயே வாங்கிக் கொண்டார்...





## 14. பகவானும் பார்த்தசாரதியும்

மகாபாரதப் போரில் அர்ஜுனனுக்கு முன்பாகத் தேர்த் தட்டில் அமர்ந்து தேரைச் செலுத்திய ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவுக்கு அர்ஜுனனை விடவும் அதிகமான காயங்கள் ஏற்பட்டதாம்.

திருவல்லிக்கேணியில் அருள்பாலிக்கும் ஸ்ரீபார்த்தசாரதிப் பெருமாளின் உற்சவ மூர்த்தியின் திருமுகம் முழுவதும் காயம்பட்ட வடுக்கள் போல் காட்சி அளிப்பதைப் பலரும் தரிசனம் செய்திருப்பீர்கள்.

இதேபோல் பகவானின் திருமேனிக்கும் அவ்வவ்போது ஏதாவது சங்கடங்கள், காயங்கள் ஏற்பட்டபடிதான் இருக்கும்.

பண்டரிபுரம் சென்று வந்த பக்தர் குழாம் ஒன்று ஸ்ரீரமணாஸ்ரமத்திற்கு வந்து தரிசித்துவிட்டு, சாப்பிட்டு விட்டுச் செல்லும்போது, ஒவ்வொருவராக ஸ்ரீபகவானைத் தழுவிக் கொண்டு விடை பெற்றார்கள். அவர்கள் சென்ற பிறகு

ஸ்ரீபகவானின் திருமேனி செக்கச்செவேல் என்று சிவந்திருப்பதைக் கண்டு ஆஸ்ரம பக்தர்கள் பதறிப் போனார்கள்.

ஸ்ரீபகவானோ -

''அங்கு பண்டரிபுரத்தில் கடவுள் கல்லாய் இருக்கிறார். இது உடம்பு தானே? இத்தனை பேர் தழுவிக் கொண்டால் இந்த உடம்பு சிவப்பது இயற்கைதானே?'' என்று எல்லோரையும் சமாதானம் செய்தாராம்.

இதுமட்டுமா...?

தம்மைத் தரிசிக்க வருபவர்களில் சிலர் நமஸ்கரிக்கும்போது அடிப்பது போல் ஸ்ரீபகவான் உணர்வாராம். ''பாவம் செய்தவர்கள் சிலர் வரும்போது அப்படி இருக்கும் போலிருக்கிறது'' என்று நினைப்பதாக ஸ்ரீபகவானே சொல்வதுண்டு.

இது தவிரவும் -

சகல ஜீவராசிகளுக்கும் நேரிடுவதுபோல், வழுக்கி விழுவது, முள் தைப்பது போன்றவற்றாலும் ஸ்ரீபகவானின் தேகம் காயம் சுமந்திருக்கிறது.

என் அப்பா ஏதோ ஒரு வருத்தத்தில் இருந்த சமயம் கீழ்க்கண்டவாறு சொல்லி ஆறுதல் படுத்தினாராம் ஸ்ரீபகவான் -

''நீ என்னவோ ரொம்பக் கஷ்டப்படற மாதிரி நெனைச்சுக்கறியே? இதுக்கு (ஸ்ரீபகவானுக்கு) என்ன ஆச்சு தெரியுமா? மலை மேலே ஒரு நாள் ஏறுகிறபோது இது கால் வைத்த கல் வழுக்கிக் கீழே விழ, சின்னதும் பெரிசுமாய் மலைக்கற்கள் இதன் மேலேயே விழுந்தது. விழுந்த வேகத்துலே இடது கைக் கட்டைவிரல், மோதிர விரல் பக்கம் தொங்கிக் கொண்டிருக்க, கட்டை விரலை அதன் இடத்தில் ஒட்டிவைப்பதற்கும், மேலே விழுந்த

கற்களை விலக்கிண்டு எழுந்து வருவதற்குள் போதும் போதும் என்று ஆகிவிட்டது...''

ஸ்ரீபகவானைத் தொடர்ந்து பேசிய அழகம்மா அம்மாள் -

''அதைப்பற்றிக் கேட்காதே ரங்கா! அன்று பகவான் ரத்த வெள்ளத்தில் வந்து நின்றதை இப்போது நினைச்சாலும் உடம்பு நடுங்கறது. தொங்கிப்போன கட்டைவிரலை யார் ஒட்டவைத்தது. உடம்பு முழுக்க இருந்த புண்களுக்கு யார் மருந்து போட்டது. எல்லாமே புரியாத புதிர்...!'' என்றாராம், நடுங்கிய குரலில்.

ஒரு நாள் ஸ்ரீபகவானும், அப்பாவும் குளத்தில் நீராடியபோது, ஸ்ரீபகவானின் காலில் தென்பட்ட ஒரு தீப்புண்ணைக் கண்டு அப்பா பதறினாராம். ஸ்ரீபகவானோ-

''அதுவா, கும்மட்டி அடுப்பில் சாம்பிராணி போட்டிருந்தார்கள். அதில் ஒரு நெருப்புக்கங்கு வெடித்து, காலில் பட்டுவிட்டது...!'' என்று சாதாரணமாகச் சொல்லிச் சிரித்தாராம்.

கிரிவலம் வந்தபோது -

அப்பாவின் காலில் தைத்த முள்ளை ஸ்ரீபகவானே எடுத்துவிட்டு அந்த இடத்தில், அருகிலுள்ள பச்சிலையைப் பறித்துச்சாறு பிழிந்துவிட்டு, ''இப்போது நட!'' என்றாராம் ஸ்ரீபகவான். கொஞ்சமும் வலியின்றி அப்பாவால் நடக்க முடிந்ததாம்.

சிறிது தூரம் சென்றபின், ஸ்ரீபகவான் ஒரு பெரிய முள்கம்பில் காலை வைத்துவிட -

அப்பா பதறியபடி ஸ்ரீபகவானின் காலில் தைத்த முள்ளை எடுத்துவிடக் குனிந்தபோது -

''ரங்கா, எந்த முள்ளை எடுக்கப்போறே, பழைய முள்ளையா, புதிய முள்ளையா...?'' என்று சிரித்துவிட்டு,

தமது காலைக் கீழே தரையில் தேய்த்துவிட்டு மேலே நடந்தாராம் ஸ்ரீபகவான்.

தமது திருவடி முழுவதும் பாதரட்சை அணிந்தது போலவும், மருதாணி அப்பியது போலவும் ஏராளமான முட்கள் குத்தியிருக்க, ஒவ்வொரு அடியிலும் அவற்றைத் தரையில் தேய்த்து அப்புறப்படுத்திவிட்டு அலட்சியமாக நடந்து சென்றாராம் ஸ்ரீபகவான்.

தம்மையே நம்பிய பக்தர்களின் துயரைத் தாம் ஏற்றுக்கொள்வதற்கா அல்லது வேறு ஏதேனும் பூர்வ ஜென்ம வினையைத் தீர்த்துக் கொள்வதற்கா என்று சாதாரணர்களால் புரிந்து கொள்ள முடியாதபடி, ஸ்ரீபகவானின் திவ்ய சரீரத்திற்கும் அவ்வவ்போது ஏதேனும் பௌதிகத் துன்பம் ஏற்படுவதையும், அதனை ஸ்ரீபகவான் பொருட்படுத்தாமல் இருப்பதையும் கண்ட என் தகப்பனார் -

''நான் என்பது இந்த உடல் அல்ல; இந்த உடலுக்கு அதிக முக்கியம் தேவையும் அல்ல...!'' என்ற தத்துவத்தை தாமே உதாரணமாகி நமக்கெல்லாம் ஸ்ரீபகவானே உணர்த்துவதைப் புரிந்து கொண்டார்.

இதற்கெல்லாம் மேலாக, ஸ்ரீபகவானின் தலை சீக்கிரமாகவே ஒரு நிலையில் இல்லாமல் ஆட ஆரம்பித்துவிட்டது. நானும் அதைப் பார்த்திருக்கிறேன். ஸ்ரீபகவானின் சக்தியை அவருடைய உடம்பினால் தாங்க இயலாததால்தான் இவ்விதம் அவருடைய தலை ஆட ஆரம்பித்துவிட்டது என்று என் அப்பா கூறுவார்.

இதுபற்றி என் அப்பாவே கேட்டபோது -

''மதம் பிடித்த யானையை ஒரு சிறிய குடிசையில் தங்க வைத்தால் எப்படி இருக்கும்..?'' என்று கூறினாராம் ஸ்ரீபகவான்.





# 15. அன்னையைப் போன்ற அக்கறை

ஸ்ரீபகவான் இயல்பிலேயே மகா ஞானியாகவும், லௌகிக பந்தங்களிலிருந்து விடுபட்டவராகவும் இருந்தபோதிலும், தம்மையே சதமெனத் தஞ்சமடைந்த என் தகப்பனாரை ஒரு தாயாரின் அக்கறையுடன் காப்பாற்றி வந்தார் என்றுதான் சொல்ல வேண்டும்.

பௌதிக ரீதியாகவும், ஆன்மிக ரீதியாகவும் அவ்வப்போது ஏற்படுகிற பின்னடைவுகளையெல்லாம் வெற்றிகண்ட, தமது பால்ய சிநேகிதராகிய என் தந்தை மேன்மேலும் முன்னேற வேண்டும் என்பதில் ஸ்ரீபகவான் தனிப்பட்ட அக்கறை காட்டிவந்தது அவரது பூர்வஜென்ம நல்வினைகளின் பயன் என்றுதான் சொல்ல வேண்டும்.

இந்நூலில் நாம் முன்பே கண்டபடி, 1920களில் என் தந்தைக்கு ஜாதகப்படி நேரம் சரியில்லை

என்றும், தம்முடனேயே அவர் இருக்க வேண்டும் என்று ஸ்ரீபகவான் கண்டிப்புடன் கூறியிருந்தார்.

ஓர் அமாவாசை தினத்தன்று தர்ப்பணம் செய்வதற்குக்கூடத் தன்னை ஸ்ரீபகவான் வெளியே செல்ல அனுமதிக்கவில்லை என்று என் அப்பா சொல்லுவார். அதோடு தாத்தாவின் போட்டோவைக் காட்டி அதைப் பார்த்துக் கும்பிட்டபின் சாப்பிடச் சொன்னாராம்.

ஆஸ்ரமத்தில் உள்ளவர்களிடமும் -

''ரங்கன் எங்கும் வெளியே போய்விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள். அவனுக்கு நேரம் சரியில்லை!'' என்று சொல்லி வைத்திருந்தார் ஸ்ரீபகவான்.

அப்பாவின் நண்பர் ஒருவர் தம்முடன் சென்னை வருமாறு அப்பாவை அழைத்தபோது, ஸ்ரீபகவான் அதற்கு அனுமதி கொடுக்கவில்லை. நண்பரைச் சென்னைக்கு ரயிலில் ஏற்றி விட்டுவிட்டு எத்தனை நேரமானாலும் ஸ்கந்தாஸ்ரமத்திற்கு திரும்பிட வேண்டும் என்று ஸ்ரீபகவான் கட்டளையிட்டபடியே, அப்பாவும் நண்பரை ரயிலேற்றிவிட்டு வந்துவிட்டார்.

பின்னும் ஒரு சமயம் -

அப்பாவின் நண்பர்கள் சிலர் தங்களுடன் சிங்கப்பூர் வருமாறு அழைத்தனர். சிங்கப்பூர் சென்றால், நிறைய பணம் சம்பாதித்துக் குடும்பத்தைக் கரையேற்றலாம் என்ற நினைப்பில் அப்பாவும் ஒப்புக் கொண்டுவிட்டார்.

ஆனால் ஸ்ரீபகவானிடம் அப்பா உத்தரவு கேட்ட போது -

''ஆகட்டும் பார்க்கலாம்!'' என்று தான் பதில் வந்ததாம் ஸ்ரீபகவானிடமிருந்து.

''போக வேண்டாம்!'' என்றும் நேரடியாகக் கூறவில்லை.

சில மாதங்கள் கழித்து ஸ்ரீபகவானின் அனுமதி கிடைத்து, அப்பாவும் திருவண்ணாமலையிலிருந்து கிளம்பி சென்னை வந்து அந்த நண்பர்களைத் தொடர்பு கொள்ள முற்பட்டபோது, அவர்கள் ஏற்கெனவே சிங்கப்பூர் கிளம்பிப் போய்விட்டதாகத் தெரிந்தது.

தமது பால்ய சிநேகிதனை வெளிநாட்டுக்குச் செல்ல அனுமதித்துவிடாமல், தமது அருகினிலேயே வைத்திருக்க ஸ்ரீபகவான் விரும்பியது என் அப்பாவின் அதிர்ஷ்டம்தான் என்று சொல்ல வேண்டும்.

சிங்கப்பூர் சென்றிருந்தால் நிறையப் பணம் சம்பாதித்திருக்கலாம். ஆனால் ஸ்ரீபகவானின் அருகாமையும், அவருக்குத் தொண்டு புரிகிற பாக்கியமும் திருவண்ணாமலையில் மட்டும்தானே கிடைக்கும்? அந்த வகையில் என் தகப்பனார் மிகப் பெரிய பாக்கியவான்.

மற்றொரு சமயம் சென்னையிலிருந்து விழுப்புரம் வழியாகத் திருவண்ணாமலை நோக்கி வருவதற்கான ரயிலைத் தவற விட்ட என் அப்பா, நண்பர் ஒருவரின் உதவியால் கூட்ஸ் வண்டி ஒன்றில் ஏறிவிட்டார். வண்டி இரவு நேரத்தில் திருவண்ணாமலையைக் கடக்கும்போது, ஓடும் வண்டியிலிருந்து இறங்க எத்தனித்துக் கீழே தவறி விழுந்துவிட்டார்.

காட்டுப்பகுதி வழியாக தட்டுத்தடுமாறி நடந்து எழுந்து ஸ்கந்தாசிரமம் வந்து சேர்ந்த என் அப்பாவின் உடம்பெல்லாம் கீறல்களும், ரத்தக் காயமும்.

''என்ன இது வேஷம்?'' என்று ஸ்ரீபகவான் கேட்க-

''உங்களைப் பார்க்கணும்னு தோணித்து. உடனே வந்துட்டேன்!'' என்று என் அப்பா பதில் சொல்லி யிருக்கிறார்.

பரிவு மேலிட்ட பகவான் ஸ்ரீரமணர் -

''பார்க்க வேண்டும் என்ற விருப்பமும் ஆர்வமுமே, பார்ப்பதை (தரிசனத்தை) விட மேலானது!'' எனக் கூறியதோடு -

''எந்தக் காரியத்தையும் அவசரப்பட்டு அள்ளித் தெளித்ததுபோல் செய்யக் கூடாது. நின்று, நிதானித்து, யோசித்துச் செய்யணும்!'' என்றும் அறிவுரை கூறியிருக் கிறார்.

ஸ்ரீபகவான் தன்னை ஒரு கைக்குழந்தையைப் போல தட்டிக் கொடுத்தும், அதட்டியும், ஆதரித்தும், அமைதி யாகவும், இனிமையாகவும் கவனித்துக் கொண்டார் என்பதை எங்களிடம் சந்தோஷமாக என் அப்பா சொல்லுவார்.

குழந்தையைப் போல் கவனித்துக் கொண்ட அந்த நண்பனுக்கு, சீடனுக்குரிய ஸ்தானத்தையும் கொடுத்தார் ஸ்ரீபகவான்.

ஒரு சமயம் இருவரும் சேர்ந்து மலை ஏறும்போது-

''மேலே இருந்து பார்க்கும்போது, கீழே எல்லாப் பொருட்களும் ஒரே மாதிரித் தெரிகிறதல்லவா?'' என்று என் அப்பா கேட்க -

''ஆமாம், நீ மேலே போகப்போக எல்லாப் பொருளும் ஒரே மாதிரிதான் தெரியும்!'' என்று கூறி, ஆன்மிக உணர்வு மிகுவதால், உலகாயுதப் பற்றுகள் விட்டுப்போகும் என்ற வேதாந்தக் கருத்தினை வெகு எளிமையாக விளக்கினாராம் ஸ்ரீபகவான்.

மேலும் -

''உனக்கு ஆசைகள் அதிகம், இதுக்கு எந்த ஆசையும் இல்லை!'' என்று சொன்னதன் மூலம், ஆசைகள் ஆன்மிக முன்னேற்றத்துக்குத் தடைக்கற்கள் என்ற சீரிய கருத்தினையும் வெளிப்படுத்தியிருக்கிறார் ஸ்ரீபகவான்.

1918-இல் ஸ்ரீபகவானுடன் திருவண்ணாமலையின் உச்சிக்குச் செல்கின்ற பெரும்பேறு என் அப்பாவுக்குக் கிட்டி யிருக்கிறது. கார்த்திகை தீபம் ஏற்றப்படும் மலை உச்சியை தரிசித்துவிட்டு, கீழே இறங்கும் வழியில் ஏழுநீர் ஊற்று (Seven Springs) என்ற இடத்தில் அன்று இரவைக் கழிக்க எண்ணி அங்கேய படுத்துக் கொண்டார்கள் இரண்டு பேரும். ஸ்ரீபகவானின் காலடியில் என் அப்பா படுத்துக் கொண்டார்.

இரவில் ஒரு தரம் திடீரென்று அப்பாவுக்கு விழிப்பு வந்து பார்த்தால், அவரைச் சுற்றிலும் மலைகளின் மீது எங்கு நோக்கினும் ஸ்ரீபகவானின் திருவுருவமே நிறைந்திருக்கக் கண்டார் என் அப்பா.

அர்ஜுனனுக்கு குருக்ஷேத்திரத்தில் கிடைத்த ஸ்ரீகிருஷ்ண பகவானின் விசுவரூப தரிசனம் போன்று ஸ்ரீபகவானின் திவ்விய தரிசனம் தமக்குக் கிடைத்ததை எண்ணி அப்பா மிகவும் மகிழ்ந்தார்.

இவ்வாறு, பாரதியின் கண்ணன் பாட்டில் வருவது போல், என் அப்பாவுக்கு நண்பனாய், மந்திரியாய், நல்லாசிரியனாய், பண்பிலே தெய்வமாய்த் திகழ்ந்த ஸ்ரீபகவானின் எளிமை எண்ணி எண்ணி வியக்க வைப்பதாகும்.





# 16. பற்றற்ற சித்த புருஷர்

நாம் ஏற்கெனவே கண்டபடி, ஸ்ரீபகவானுக்குச் சித்து விளையாட்டு கள் நடத்துவதிலும், பார்ப்போரை பிரமிக்க வைக்கச் செய்யுமாறு நடந்து கொள்வதிலும் ஒரு போதும் விருப்பம் இருந்ததில்லை.

இருந்தபோதிலும் -

சித்தர்கள் வழிபடும் திரு வண்ணாமலைத் தலத்தின் வாசனை யினாலோ, வேதகால ரிஷிகளுக்கு நிகரான தவத்தின் வலிமை யினாலோ, ஸ்ரீபகவான் அவ்வவ் போது சில அதிசயங்களை நிகழ்த்திக் கொண்டுதான் இருந்தார்.

ஆனால் -

அத்தகைய அதிசய நிகழ்வுகள் ஸ்ரீபகவான் தமது பக்தர்கள் மீது கொண்ட வாத்ஸல்யத்தினாலும், அவர்களை வெகு விரைவில் மெய்ஞ்ஞான உணர்வுபெற வைக்க வேண்டும் என்ற அருள் கலந்த ஆவலினாலும் விளைந்தனவே யாகும்.

ஒரு சித்து விளையாட்டுக் காட்டுபவர் என்ற ரீதியில் உலகத்தார்ரிடையே தாம் பிரபலம் அடைய வேண்டு மென்றோ, அதன் காரணமாக பக்தர்கள் கூட்டமும், காணிக்கைகளும் குவிய வேண்டும் என்றோ ஸ்ரீபகவான் ஒரு போதும் விரும்பியவரில்லை.

ஒருமுறை, ஸ்ரீகாவ்ய கண்ட கணபதி முனி என்பவர், ஸ்ரீபகவானின் ஜாதகத்தை கணித்துப் பார்த்து, அவர் அடுத்த மாதம் வெளியூர்களுக்குத் தீர்த்த யாத்திரை செல்வார் என்று உறுதிபடக் கூறினார்.

ஸ்ரீபகவான் *1896*-ல் திருவண்ணாமலை வந்து சேர்ந்ததிலிருந்து சிவமாகும் வரை வேறு எந்த இடத்திற்குமே எழுந்தருளியதில்லை என்பது யாவரும் அறிந்ததே.

ஸ்ரீபகவானிடம், ஸ்ரீகாவ்யகண்ட கணபதிமுனியின் கணிப்பைப் பற்றி என் அப்பா கூறியபோது -

''அவர் வேங்கடராமனின் (ஸ்ரீபகவானின் பூர்வா சிரமப் பெயர்) ஜாதகத்தைப் பார்த்துச் சொன்னார். ஆனால் அது இப்போது பலிக்காது. ஏனெனில், இப்போது மறு ஜென்மம் கிடைத்திருக்கிறது...'' என்று கூறிவிட்டாராம் ஸ்ரீபகவான். துறவு ஏற்பது என்பது ஒரு மனிதனுக்கு மறுபிறவிக்கு நிகரானது என்பது சான்றோர் வாக்கு.

அப்பா விடாமல் கேட்டாராம் -

''மதுரையிலேயே தங்களுக்கு ஞானம் கிடைத்து விட்டதா?''

ஸ்ரீபகவானும் சளைக்காமல் பதில் கூறினாராம் -

''ஆமாம், எப்போது அருணாசலம் என் மனதில் புகுந்ததோ, அப்போதிலிருந்தே சமாதி நிலைதான். விளையாடினாலும், பேசினாலும், தூங்கினாலும், சாப்பிட்டாலும் அந்த நிலையிலிருந்து மாற்றம் என்பதே இல்லை.

ஸ்ரீபகவான் இப்படிச் சொன்னாலும், நடந்தது வேறு -

ஸ்ரீபகவானை ரிஷிகேசத்தில் பார்த்ததாகவும், பம்பாயில் (இப்போது மும்பை) பார்த்ததாகவும் சில பக்தர்கள் என் அப்பாவிடம் கூறினார்களாம்.

''நீங்கள் அங்கெல்லாமும் சென்றீர்களா...?'' என்று ஸ்ரீபகவானிடம் கேட்டதற்கு மௌனமே பதிலாகக் கிடைத்திருக்கிறது.

1922-இல் என் அப்பாவுக்கே ஒரு விசித்திர அனுபவம் நேரிட்டிருக்கிறது...

ஒரு சமயம் ஸ்ரீஸ்கந்தாஸ்ரமத்தின் உள்ளே ஸ்ரீபகவான் படுத்து ஓய்வெடுத்துக் கொண்டிருக்க, வெளியே சென்றுவிட்டு வந்த என் அப்பா ஆஸ்ரமத்தின் வெளியே ஸ்ரீபகவானைக் கண்டாராம். பிறகு ஏதோ எடுப்பதற்கு உள்ளே சென்றால், முன்பு படுத்திருந்த இடத்திலேயே ஸ்ரீபகவான் படுத்துக் கொண்டிருந்தாராம்.

திகைப்பும் வியப்புமாக என் அப்பா (படுத்துக் கொண்டிருந்த) ஸ்ரீபகவானிடம் கேட்டபோது -

''ஏன் அப்பவே சொல்லவில்லை; அந்தத் திருடனைப் பிடித்திருக்கலாமே?'' என்று நகைச்சுவை யாகக் கூறி, மேற்கொண்டு அந்தப் பேச்சு வளராமல் தடுத்துவிட்டாராம் ஸ்ரீபகவான்.

வேறொரு சமயம், நிறைய பக்தர்கள் ஸ்ரீரமணாஸ் ரமத்தில் குவிந்தபோது, ஆசிரம நிர்வாகி ஒருவர், ஸ்ரீபகவானுக்கு ஓய்வு தேவை என்று கூறி, அவர் தங்கியிருந்த அறையைப் பூட்டிவிட்டாராம்.

ஆனாலும் கதவு பூட்டியபடியே இருக்க -

தம்மைக்காணும் ஆவலுடன் காத்திருந்த பக்தர் களுக்கு ஸ்ரீபகவான் வெளியில் வந்து அமர்ந்து தரிசனம் கொடுத்தாராம்.

எங்கள் குடும்பத்திற்கு அருளியது போலவே, வேறு பலப்பல பக்தர்களின் குடும்பங்களையும் பல்வேறு இன்னல்களிலிருந்து காப்பாற்றி, அருள் மழை பொழிந்த ஸ்ரீபகவான், அவற்றைத் தாம் செய்ததாக நினைக்கக்கூட மாட்டார். அவற்றுக்கும் தமக்கும் சம்பந்தம் ஏதும் இல்லாதது போல் நடந்து கொள்வார்.

தம்மைப் பற்றி எதுவும் பெரிதாகக் கூறப்படுவதை விரும்பாத ஸ்ரீபகவான், தாம் சிறுவயதிலேயே குடியேறி விட்ட அருணாசல க்ஷேத்திரத்தின் மகிமையை எல்லோருக்கும் எடுத்துரைப்பார்.

''ரங்கா, இந்த மலை வெறும் கல்லால் ஆன சாதாரண மலை இல்லை. பலப்பல யோகிகளும், சித்தர்களும் நிறைந்த மலை. இங்கே யார், எப்போது, எந்த ரூபத்திலே வருவான்னு சொல்ல முடியாது'' என்று என் அப்பாவிடம் அடிக்கடி கூறுவாராம் ஸ்ரீபகவான்.

அதை மெய்ப்பிப்பது போலவே, ஸ்கந்தாஸ்ரமத்தில் ஸ்ரீபகவானின் ஜயந்தி தினம் (பிறந்த நாள்) ஒன்றில், ஒரு தங்க நிறக் கீரிப்பிள்ளை வந்து, ஆஸ்ரமத்தின் எல்லா அறைகளுக்குள்ளும் நுழைந்துவிட்டுச் சென்றதாம்.

அதைப்பற்றிக் கேட்டதற்கு -

''யாரோ ஒரு பெரியவர் இந்த வடிவில் தரிசனம் கொடுத்துவிட்டுச் செல்கிறார்...!'' என்றாராம் ஸ்ரீபகவான்.

அருணாசல மலையின் பெருமைகளைத் தாம் உணர்ந்தது மட்டுமின்றி மனிதர் அனைவருமே உணர வேண்டும் என்பதற்காகவே அருணாசல ஸ்துதி பஞ்சகம், அக்ஷரமணமாலை போன்ற பல சுலோகங்களை ஸ்ரீபகவான் இயற்றி உதவியிருக்கிறார்.





## 17. எளிமையின் மறு உருவம்

ஸ்ரீபகவான் சமையல் செய்தால் மிக ருசியாக இருக்குமாம்.

ஆஸ்ரம பக்தர்களுடன் உற்சாகமாகச் சேர்ந்து கொண்டு, காய்கறி நறுக்குவது, சமையல் செய்வது, சாப்பாட்டிற்கான இலைகளை ஈர்க்குச்சி கொண்டு தைப்பது ஆகிய எல்லாவற்றையும் தாமும் செய்த பகவான், பக்குவமாகச் சமைப்பது எப்படி என்பதையும் சமையல் செய்பவர்களுக்கு விளக்குவாராம்.

ஸ்ரீபகவானுக்கு எதையும் வீணாக்குவது பிடிக்காது.

கத்திரிக்காயின் உச்சியில் இருக்கும் பச்சை நிறக் காம்பையும், தோலையும் பாவாடை என்போம். அந்தப் பாவாடையில்தான் சத்து அதிகம் என்று கூறிய ஸ்ரீபகவான், ஒருமுறை தம்முடைய திருக்கரங்களாலேயே அந்தப் பாவாடைகளை நறுக்கிக் கொடுத்து, உப்புமாவில் சேர்க்கச் சொன்னாராம்.

அன்றைய தினம் உப்புமாவும் மிகவும் சுவையாக அமைந்துவிட்டது.

ஸ்ரீபகவானின் கருத்துக்கிணங்க, எங்கள் குடும்பத்து இல்லங்களில், கத்திரிக்காயின் பாவாடையைக் குப்பையில் எறிந்து வீணாக்காமல், சமையலிலும் நாங்கள் பயன்படுத்தத் தொடங்கினோம்.

ஒரு சமயம் ஆசிரம பக்தர்களுக்கான சமையலில் என் அம்மாவும் பங்கு கொண்டாள்.

அப்போது, ஒரு பெரிய பித்தளை அண்டாவில் துவரம்பருப்பை அடுப்பில் வேகவைத்துக் கொண்டிருந்த போது சமையலறையில் வேகமாக நுழைந்த ஸ்ரீபகவான், ''என்ன செய்யறே செல்லம்மா...?'' என்று கேட்டுவிட்டு, ஒரு இரும்புக் கரண்டியால் பருப்பைக் கிளற ஆரம்பித்தாராம்.

என் தாயார் சற்று பயந்தபடி -

''இரும்புக் கரண்டியால் கிளறினால் வேகாது என்பார்கள்'' என்று தயங்கித் தயங்கிச் சொல்லவும் -

''ஓஹோ, அப்படியும் ஒன்று இருக்கோ, சமையல் விஷயங்கள் பெண்களுக்குத்தான் தெரியும்'' என்று சொல்லிவிட்டு, சற்று நேரம் பருப்பைக் கிளறிய பின்-

''எங்கே, பருப்பு வெந்திருக்கான்னு பாரு'' என்றாராம் ஸ்ரீபகவான்.

சாதாரணமாக அடுப்பில் பருப்பு வைத்தால், அது வெந்து, சாம்பார், ரசத்திற்கேற்பக் குழைவதற்கு அதிக பட்சம் முக்கால்மணி நேரம் ஆகும்.

ஆனால் -

ஸ்ரீபகவான் இரும்புக் கரண்டியால் கிளறிய பருப்பு பத்தே நிமிடங்களில் குழைவாக வெந்திருந்தது.

ஸ்ரீபகவானின் திருக்கரம் பட்டால் எதுதான் நடக்காது...?





# 18. ஸ்ரீபகவானுக்குத் திருக்கல்யாணம்

ஒருமுறை ஸ்ரீபகவானுடன் என் அப்பா, அம்மா இருவருமே கிரிவலம் வந்தார்கள்.

அப்போது ஸ்ரீபகவான் -

''இது எதை அடையணுமோ அதை அடைஞ்சாச்சு, இனிமேல் என்ன வேணுமானாலும் செய்ய லாம்...'' என்றார்.

உடனே என் அம்மா ஸ்ரீபக வானிடம் தமக்கே உரிய உரிமை யோடு, நகைச்சுவை மிளிரக் கேட்டார் -

''அப்படின்னா கல்யாணம் செய்துக்கலாமா...?''

''ஊம், அதுவும் செய்துக்க லாம்!'' என்றார் ஸ்ரீபகவான் அதே நகைச்சுவை உணர்வுடன்.

அம்மாவுக்கு சந்தோஷம் பிடிகொள்ளவில்லை.

அந்த முறை விளாச்சேரிக்குத் திரும்பியவுடனே, ஸ்ரீபகவானின் அருளால், கவிதைகள் எழுதும் திறமை பெற்றிருந்த என் அண்ணன் கிருஷ்ணசாமியிடம், ஸ்ரீபகவான் பரம ஞானத்தை அடைந்துவிட்டதால், அதையே ஞானி என்கிற பெண்ணாக உருவகப்படுத்தி, ஸ்ரீபகவானுக்கும், ஞானி என்கிற மணப்பெண்ணுக்கும் திருமண வைபவம் நடப்பதாகப் பாட்டுக்கள் எழுதச் சொன்னார்.

கிருஷ்ணசாமி அண்ணா, ஸ்ரீபகவான் அழகம்மா அம்மாளின் திருவயிற்றில் உண்டானதிலிருந்து, அவரது அவதாரம், குழந்தைப் பிராயம், பிள்ளைப்பருவம், பின்னர் திருவண்ணாமலை சென்று தவம் புரிந்து, ஞானி என்கிற பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளுதல் என்று இவ்வாறாகப் பாட்டுக்கள் எழுத, எங்கள் அம்மா அவற்றுக்கு மெட்டு அமைத்து, ஸ்ரீரமணாம்ருதம் என்ற புத்தகமாகவே அச்சிட்டு வெளியிட்டார்கள்.

1940-ம் வருடம் வெளியான ஸ்ரீரமணாம்ருதப் பாடல்களை என் அண்ணனே பெற்றோருடன் திருவண்ணாமலைக்குச் சென்று ஸ்ரீபகவானுக்குப் பாடிக் காண்பித்தாராம்.

ஸ்ரீபகவானைப் பற்றிய விஷயங்களை, எங்கள் அப்பா சொல்லக் கேட்டு, ஸ்ரீரமணாம்ருதத்தில் இடம் பெறச் செய்திருந்ததைக் கண்ட ஸ்ரீபகவான் -

''ஒண்ணு கூட விடாம எல்லாத்தையும் சொல்லிட் டானா ரங்கன்...?'' என்று கேட்டு ஆச்சரியப்பட்டாராம்.

அதில் அழகம்மா அம்மாள், தம்முடைய மருமகளாக வரும் ஞானிக்கு, தன் பிள்ளை சாதாரணமானவர் இல்லை

என்பதையும், ஸ்ரீபகவான் விஷத்தை விழுங்கியதையும், சிவலிங்கமாகக் காட்சி தந்ததையும் எடுத்துச் சொல்லி அறிவுரை கூறுவதாக அண்ணா கிருஷ்ணசாமி அழகான பாடல்களைப் பாடியுள்ளார்.

ஒரு சிலர் ஸ்ரீரமணாம்ருதம் வெளிவந்த சமயத்தில், ஸ்ரீபகவானுக்கும், ஞானிக்கும் கல்யாணம் என்று எழுதியிருப்பதன் சூட்சும அர்த்தத்தைப் புரிந்து கொள்ளாமல், ''துறவிக்குத் திருமணமா?'' என்று கேலி பேசினார்கள்.

ஆனால், ஸ்ரீபகவானின் பூரண அருள் துணையாக இருந்தமையால் என் பெற்றோர்கள் அத்தகைய விமரிசனங்களைப் பொருட்படுத்தவில்லை.

ஊஞ்சல், லாலி, உப்புக்கொட்டுதல் என்று பொதுவாகத் திருமணங்களில் இடம்பெறும் சடங்குகள் அனைத்தும் நடந்து, ஸ்ரீபகவான் - ஞானி ஆகியோரின் திருக்கல்யாணம் நிறைவுறுவதாகப் பொருள் அமைந்த சுவையான பாடல்களுடன் கூடிய ஸ்ரீரமணாம்ருதத்தை என் பெற்றோர் வெளியிட, பலதரப்பினரின் பாராட்டையும் பெற்றது அந்தப் புத்தகம்.

மீண்டும் 1994-இல் என் தங்கை அழகம்மாவின் மூலம், அப்போதைய ஸ்ரீரமணாஸ்ரமத் தலைவரின் அனுமதி பெற்று, மறுபதிப்பு கண்ட ஸ்ரீரமணாம்ருதம், இப்போதும் ஸ்ரீரமணாஸ்ரமப் புத்தகக் கடையில் கிடைக்கிறது.

ஸ்ரீரமணாம்ருதத்தில் மேலும் சில விசேஷங்கள் உண்டு. ஸ்ரீபகவான் இயற்றிய அருணாசல அட்சர மாலையைப் போன்று, என் அண்ணா ஸ்ரீரமண அக்ஷர மணமாலையை இயற்றி, அப்புத்தகத்தில் இணைத்துள்ளார். அதற்காக அருணாச்சலா என்பதற்கு பதிலாக,

ரமணானந்தா என்று முடியும் 108 இரண்டு வரிப் பாடல்களை இயற்றினார் கிருஷ்ணசாமி அண்ணா.

இதுமட்டுமல்ல -

ஒருமுறை தம் அன்னைக்குக் கடும் காய்ச்சல் வந்தபோது அருணாசலத்தை வேண்டி ஸ்ரீபகவான் எழுதிய பாட்டையும் ஸ்ரீரமணாம்ருதத்தில் குறிப்பிட்ட என் அண்ணன், அதே பாணியில் -

''ஞான ரமணன் என்னும் மருந்து
நற்றவத்தால் யாம் பெற்ற மருந்து
தீராத நோய்களைத் தீர்க்கும் மருந்து
நீறாக்கிப் பாவத்தை நீக்கும் மருந்து''

- என்ற மருந்துப்பாட்டையும் எழுதியுள்ளார்.

எங்கள் குடும்பங்களின் பேரன், பேத்திகளுக்குக் கூட இப்பாட்டு மனப்பாடம்.

யாருக்கு எந்த நோய் வந்தாலும், உடனே இந்தப் பாட்டை நம்பிக்கையுடன் பாடித் திருநீறு அணிந்து பகவான் ஸ்ரீரமணரின் அருளால் நிவர்த்தி அடைந்து வருகிறோம்.





## 19. அழகம்மா அம்மாளின் முக்தி

ஸ்ரீபகவான் ஈஸ்வர அவதாரம் என்கிற உண்மை பல சமயங்களில் வெளிப்பட்டிருக்கிறது. அவருடைய தாயார் அழகம்மா அம்மாள் முக்தி யடைந்த போதும் அது வெளிப் பட்டிருக்கிறது.

ஸ்ரீபகவானின் ஈஸ்வராம் சத்தை உணர்ந்திருந்த என் தாயார் ஒரு சமயம் கால்வலியின் காரண மாகத் தம்மால் கிரிவலம் வர இயலாது என்று உணர்ந்து, ஸ்ரீபக வான் அமர்ந்திருந்த பழைய ஹாலையே மூன்று முறை வலம் வந்து, ஸ்ரீபகவான் முன்பு நமஸ் கரித்து விட்டு அமர்ந்தார்.

''என்ன செல்லம்மா, அதுக் குள்ளே கிரிவலம் முடிச்சுட்டியா?'' என்று ஸ்ரீபகவான் கேட்க, என் அம்மாவும் தமது இயலாமையை வெளிப்படுத்தி யிருக்கிறார்.

உடனே ஸ்ரீபகவான் -

''பிள்ளையார் சிவனையும் பார்வதியையும் சுத்தின மாதிரியா?'' என்று கேட்டுவிட்டு -

''அதுக்காக, சிவனிடம் பிள்ளையார் மாம்பழம் கேட்டதைப் போல இதனிடம் (தம்மிடம்) நீ கேட்டுவிடாதே...!'' என்று நகைச்சுவைத் ததும்பக் கூறியது, தாம் செய்ததை ஸ்ரீபகவானே அங்கீகாரம் செய்துவிட்டதாக உணர்ந்து பேரானந்தம் அடைந்தார் என் அம்மா.

அதுபோலவே, ஒருமுறை என் தாயாரைச் சுட்டிக்காட்டி

''இவங்களைச் சாதாரணமான ஆசாமி என்று நினைத்துவிடாதீர்கள். தன் கணவன் அவ்வப்போது பிரிந்தபோதும், தனியாளாய் நின்று சமாளித்து, தன்மானம் காத்து, கணவனையும் நிந்திக்காமல், குழந்தைகளை நல்லபடியாய் வளர்த்து இருக்கிறார்...!'' என்று ஆஸ்ரமத்தில் இருந்தவர்களிடம் கூறினாராம் ஸ்ரீபகவான்.

ஸ்ரீபகவானின் பாராட்டுகளை விடப் பெரிய வரம் வேறு என்ன வேண்டும் எங்கள் அம்மாவுக்கு...?

நான் எட்டு வயதுச் சிறுமியாக இருக்கும்போதே என் பெற்றோர்களுடன் ஸ்ரீரமணாஸ்ரமத்திற்குச் சென்று ஸ்ரீபகவானை தரிசனம் செய்திருக்கிறேன்.

ஸ்ரீபகவான் எந்த ருசிக்கும் அடிமைப்படாதவர்.

தமது இலையில் இடப்பட்ட எல்லா உணவு வகைகளையும் ஒன்றாகக் கலந்து சாப்பிடுவார்.

''பகவானே, ஏன் இப்படி எல்லாத்தையும் ஒண்ணாக் கலந்து சாப்பிடறேள்...?'' என்று சிறுமியாக நான்

வியப்புடன் கேட்டபோது, சிறு பெண்தானே என்று அலட்சியம் செய்யாமல் பதில் சொன்னார் ஸ்ரீபகவான்-

''நாம் சாப்பிட்டவை எல்லாம் ஒன்றாகக் கலந்துதானே ஜீரணமாகிறது? காய்கறி, சாதம், பாயசம், மோர் என்று தனித்தனியாகவா ஜீரணமாகிறது. ருசி எல்லாம் நாக்குக்கு மட்டும் தான்!'' என்று ஸ்ரீபகவான் அப்போது சொன்னது, எண்பது வயதை நெருங்கிக் கொண்டிருக்கும் இன்றுவரையில் என் நினைவில் நீங்காதிருக்கிறது.

அந்தக் காலத்தில் பிராமணர்கள், பிராமணர் அல்லாதார் முன்னிலையில், சாப்பிடமாட்டார்கள். இதற்காகவே, சாப்பாட்டு அறையில், பிறர் பார்க்காதவாறு ஒரு மரத்தடுப்பை அமைத்துக் கொண்டு பிராமணர்கள் உணவு உண்பது வழக்கம்.

ஆனால், ஜாதி, மத, இன வேறுபாடுகளைக் கடந்த ஸ்ரீபகவான் அவர்கள் இரு பிரிவினருக்கும் நடுவில்தான் உட்கார்ந்து கொண்டு உணவு உண்பார்.

ஸ்ரீரமணாஸ்ரமத்தில் விருந்தினர்கள், பரதேசிகள் என்று நிறையப்பேருக்கு உணவு வழங்கப்படும். பொதுவாக விருந்தினர்கள் சாப்பிட்ட பின்புதான் பரதேசிகளுக்கு உணவு வழங்குவது வழக்கம். (இது ஸ்ரீபகவான் செய்த வழக்கமல்ல. பிறர் ஏற்படுத்தியது.)

ஒரு நாள், உணவு கேட்டு வந்த பரதேசி ஒருவரை விருந்தினர்கள் சாப்பிட்ட பிறகு வரச் சொல்லி ஆசிரமவாசி ஒருவர் வெளியேற்றிவிட்டார்.

விருந்தினர்கள் உணவுப் பந்தியில் தயாராக இருக்க, ஸ்ரீபகவான் இன்னும் சாப்பிட வரவில்லையே என்ற ஆசிரமம் முழுக்கத் தேடி இருக்கிறார்கள்.

கடைசியில் பார்த்தால், ஆசிரம வாசல் மரத்தின் அடியில், பரதேசிகளுடன் உட்கார்ந்திருந்த ஸ்ரீபகவான், உணவு உண்ண வரமறுத்துவிட்டார்.

''இதுவும் ஒரு பரதேசிதான்! உள்ளே சாப்பாடு ஆன பிறகு சாப்பிட்டால் போதும்!'' என்று ஸ்ரீபகவான் கூறிவிட -

முதலில் பரதேசியை விரட்டிய ஆசிரமவாசி வந்து, ஸ்ரீபகவானின் கால்களில் விழுந்து மன்னிப்புக் கேட்டார். அன்று முதல், பரதேசிகளுக்குத்தான் ஸ்ரீரமணாஸ்ரமத்தில் முதலில் சாப்பாடு போடும் வழக்கம் தொடங்கியது.

இன்றும் கூட, தினம்தோறும் காலை பத்தரை மணி அளவில் மரத்தடியில் கூட ஆரம்பிக்கும் பரதேசிகளுக்கு, பெரிய அண்டாக்களில் ஏதாவது ஒரு வகை கலந்த சாதம் எடுத்துக் கொண்டு வந்து பதினோரு மணியளவில் விநியோகிக்கிறார்கள். அதன் பிறகு, சுமார் பதினொன்றரை மணியளவில் விருந்தினர்களுக்குச் சாப்பாடு பரிமாறப் படுகிறது.

இவ்வாறு பிராமணர், பிராமணரல்லாதார், பரதேசிகள் என்று சகலரிடத்திலும் சமபாவத்துடன் கருணை காட்டினார் ஸ்ரீபகவான்.

தம்மைப் பெற்ற தாயாரான ஸ்ரீ அழகம்மா அம்மா வுக்கும் ஈசுவர அவதாரமாகிய ஸ்ரீபகவான் ஞானத்தையும் முக்தியையும் வழங்கினார்.

அழகம்மா அம்மாள் முக்தி பெறப்போகும் தினத்தன்று காலை முதலே ஆசிரமவாசிகள் எல்லோரும் சாப்பிடாமல், ஒன்றாக அமர்ந்து ராமநாம ஜெபம், அருணாசல சிவ பாடல், ஸ்ரீவிஷ்ணு சகஸ்ர நாம பாராயணம் எல்லாம் செய்து கொண்டிருந்தார்கள்.

அன்னையாரின் மூச்சு அடங்கிய சிறிது நேரத்திற்கெல்லாம், ஸ்ரீபகவான் எழுந்து கொண்டு -

''வாங்கோ, எல்லாரும் சாப்பிடலாம்!'' என்றாராம்.

பொதுவாக, உடலை அடக்கம் செய்யும்வரை யாரும் சாப்பிடமாட்டார்கள்.

ஆனால் ஸ்ரீபகவானோ -

''அம்மா எங்கும் செல்லவில்லை. இங்கேதான் இருக்கிறார். சாப்பிடலாம்!'' என்று சொல்லி எல்லோருடனும் உணவு உண்டாராம்.

மறுநாள், மலையடிவாரத்தில் அன்னையின் பூதவுடல் அடக்கம் செய்யப்பட்ட பின்பு, நீராடத் தண்ணீர் இன்றி எல்லோரும் திண்டாடினர்.

ஸ்ரீபகவான், அன்னை அடக்கம் செய்யப்பட்ட இடத்திற்குச் சற்று தூரத்தில் சென்று, அங்கிருந்த ஒரு பாறையில் முக்கோண வடிவில் மூன்று கோடுகள் போட்டாராம். அங்கிருந்த பாறைரைய நகர்த்தியவுடன், ''குபுகுபு'வென்று தண்ணீர் பீறிட்டு வரத் தொடங்கியது. ஸ்ரீபகவானின் கருணையை வியந்தபடி பக்தர்கள் எல்லாரும் நீராடி முடித்தார்கள்.

(தற்போதுள்ள) ஸ்ரீபகவானின் சமாதிக்கும், ஆசிரம சாப்பாட்டு அறைக்கும் நடுவில் அமைந்திருந்த அந்த (நீருற்று கண்டுபிடிக்கப்பட்ட) இடத்தில் பின்னர் பெரிய கிணறு தோண்டப்பட்டு, ஸ்ரீரமணதீர்த்தம் என்று பெயரிடப்பட்டது. எண்பது ஆண்டுகளுக்கும் மேலாக வற்றாது நீர் சுரந்து கொடுக்கும் இந்தப் பெரிய கிணற்றின் தண்ணீர்தான் ஸ்ரீரமணாஸ்ரமத்தில் அபிஷேகங்களுக்குப் பயன்படுத்தப்படுகிறது.

தம்முடைய அன்னையின் சமாதிக்கும் அருகிலேயே (ஒரு கூரைக் கொட்டகையில்) வசிக்கத் தொடங்கிய பகவான் ஸ்ரீரமணர், அருகிலிருந்த ஒரு மரத்தினடியில்தான் உறங்குவாராம்.

அக்காலங்களில் என் அப்பாவும் ஆசிரமத்தில் தங்கியதால், ஸ்ரீபகவானுடனேயே அந்த மரத்தடியில் படுத்து உறங்குவது வழக்கமாம்.

கல்லோ, கட்டாந்தரையோ எதுவாயினும் பொருட் படுத்தாத ஸ்ரீபகவான், அந்த மரத்தடியில் சமமில்லாத தரையில் படுப்பதற்கு என் அப்பா சிரமப்பட்டதைப் பார்த்து, அந்த இடத்தை சில சாதுக்களைக் கொண்டு நேர்த்தியாகச் சமப்படுத்திக் கொடுத்தாராம்.

இரவு நேரங்களில் ஒருமுறை கூட ஸ்ரீபகவான் சோம்பல் முறித்தோ, கொட்டாவிவிட்டோ என் அப்பா பார்த்ததே கிடையாதாம். ஸ்ரீபகவானுடன் இருந்த நேரங்களில் என் அப்பா கவலையே அறியாதவராய் நிம்மதியாகவும், சந்தோஷமாகவும் இருப்பாராம்.





# 20. மேலும் சில உபதேசங்கள்

ஒருமுறை மகாமகத்திற்குச் சில தினங்கள் முன்பு வியாபார நிமித்தமாகக் கும்பகோணம் சென்றிருந்த என் தகப்பனார், மகா மகத் திருவிழா தொடங்க இரண்டு நாள் முன்னதாகவே திருவண்ணா மலைக்கு வந்துவிட்டாராம்.

என்ன இது, எல்லோரும் கும்பகோணத்திற்குப் போகும்போது, நீ மட்டும் இங்கே வந்துவிட்டாய்?'' என்று ஸ்ரீபகவான் கேட்க -

''எனக்கு இங்கே இருக்கும் கடவுள் மகாமகக் கடவுளை விடவும் உயர்வாகத் தோன்றியதால் வந்து விட்டேன்!'' என்று என் அப்பா பதில் கொடுத்தாராம்.

ஆனால், சில நாட்கள் கழித்து, மதுரைக்குச் செல்ல வேண்டியிருந்த தால், ஸ்ரீபகவானைப் பிரிய வேண்டி யிருக்கிறதே என்று வருந்திய என் தந்தையிடம் -

''இதோ பார் ரங்கா! நீயாகவே கும்பகோணத்திலிருந்து இங்கு வந்துவிட்டு மதுரை செல்லுவதாக நினைத்துக் கொள்கிறாய். உண்மையில் நீ எங்கே இருக்கிறாயோ, அங்கேயேதான் இருக்கிறாய். ஆனால், உன்னையே நீ அறிந்து கொண்டால், 'இதனிடம்' தனியாக எதுவும் இல்லை என்று உணர்ந்து கொள்வாய், நீ நீயாக இரு!'' என்று உபதேசித்தாராம் ஸ்ரீபகவான்.

வேறொரு சமயம் -

''ஞானி ஆவதற்கு நான் இன்னும் எத்தனை பிறவி எடுக்க வேண்டும்?'' என்று என் அப்பா கேட்டதற்கு -

''அதற்கு நேரமும் தூரமும் கணக்கு இல்லை. ஒரு மணி நேரக்கனவில் எத்தனை வருஷத்தைப் பார்க்கிறாய். சமுத்திரமும், மலையும், கட்டிடங்களுமாக வரும் சினிமாக்காட்சி முடிந்த பிறகு, சினிமாத்திரை அப்படியே தான் இருக்கிறது. அதுபோலத்தான், உலகம் என்பது வெளியே இல்லை. உனக்குள்ளே தான் இருக்கிறது!'' என்று, மாயையைப் பற்றி அர்ஜுனனுக்கு ஸ்ரீகிருஷ்ண பகவான் சொன்னதைப் போல், என் அப்பாவுக்கு உபதேசித்தார் ஸ்ரீபகவான்.

பந்தபாசங்களில் இருந்து மீள முடியாத நிலையிலிருந்த என் தந்தை -

''உங்கள் அருள் எனக்கு இல்லையோ என்று பயப்படுகிறேன் பகவானே!'' என்று கூற -

''கழுத்து வரை கங்காஜலத்தில் மூழ்கியிருப்பவன், தனது தாகத்தைத் தஞ்சாவூர்க் குழாய்த் தண்ணீர்தான் போக்கும் என்பதுபோல் இருக்கிறது ரங்கா, நீ சொல்வது!''

என்று ஸ்ரீபகவான் கூறியதில் வாயடைத்துப் போனாராம் என் அப்பா.

மிகவும் எளிய நடைமுறை ரீதியான உதாரணங்களைக் கையாண்டு, பிரம்மாண்டமான தத்துவங்களை, பாலாடையில் உள்ள பாலை ஒரு குழந்தைக்குப் புகட்டுவதுபோல் புகட்டுவதில் ஸ்ரீபகவானை மிஞ்சுவது யார்?

''நான் யார்?'' என்ற நூலை எழுதிய ஸ்ரீபகவான்-

''மனது என்ற ஒன்று இருக்கும்வரை பிராரப்தம் என்பது இருக்கத்தான் செய்யும். மனோ நாசம் செய்து விட்டால் பிராரப்தம் எங்கே, யாரை பாதிக்கும்...!'' என்று ஒருமுறை என் அப்பாவிடம் கூறியிருக்கிறார் ஸ்ரீபகவான்.

இதேபோன்று, நான்கு மணிநேரம் யோக சாஸ்திரத்தைப் பற்றி விரிவாகப் பேசிய ஒரு மலையாள யோக நிபுணரிடம் -

''மனதை அடக்குவதும், பிறகு மனமே இல்லாமல் செய்வதுதானே ஞானம், யோகம் எல்லாம்...!'' என்று ஒரு வரியில் கூறி, அந்த யோக நிபுணருக்கு மனத் தெளிவு ஏற்படுத்தியிருக்கிறார் ஸ்ரீபகவான்.

ஸ்ரீபகவான் சில சமயங்களில் பேச்சினாலும், பல தருணங்களில் மௌனத்தினாலும் பலரது சந்தேகங்களைத் தீர்த்திருக்கிறார்.

வடமொழியிலிருந்து தாமே மொழி பெயர்த்த, ''மௌனமாம் முறையால்'' என்ற தட்சிணாமூர்த்தி ஸ்தோத்திரத்தைத் தமது கைப்பட எழுதி என் அம்மாவிற்குக் கொடுத்த ஸ்ரீபகவானைப் பலரும் ஞானவடிவான

ஸ்ரீதட்சிணாமூர்த்தி அவதாரமாகவே நினைப்பதில் வியப்பொன்றும் இல்லை.

ஆயினும், பிறர் தம்மை தெய்வமாக மதித்துக் கொண்டாடுவதை ஸ்ரீபகவான் ஒரு போதும் விரும்பிய தில்லை.

ஸ்ரீபகவான் தரையில் உட்கார வேண்டாம் என்று, பக்தர்கள் சிலர் மரத்தில் சாய்வு நாற்காலி ஒன்று செய்து கொடுத்தார்கள்.

''ரங்கா, இனிமேல் இதில்தான் உட்கார வேண்டு மாம். பிடிக்கவில்லை. தரையிலேயே சௌகரியமாக இருக்கிறதே...!'' என்று கூறினாரர்ம் ஸ்ரீபகவான்.

''எங்களைவிட உயர்ந்த நிலையில் இருக்கும் தாங்கள் நாற்காலியில் உட்கார்வதுதான் சரி!'' என்ற என் அப்பாவுக்கு, ஸ்ரீபகவான் மௌனத்தையே பதிலாக அளித்திருக்கிறார்.

ஞான வடிவாகிய ஸ்ரீபகவானின் சரித்திரத்தை 'ஸ்ரீரமணாம்ருதம்' என்ற கவிதை நூல் வடிவில் வழங்கிய என் அண்ணன் திரு.கிருஷ்ணசாமி, 1966-இல் ஸ்ரீரமணரின் திருவடியில் கலந்தார்.





## 21.
## அஃறிணைகளிடத்திலும் அன்பு

ஸ்ரீபகவான் மனிதர்களைப் போலவே, மிருகங்களையும் நேசித்து வந்தார்.

ஸ்ரீபகவானின் மடியில் எப்போதும் ஒரு நாய் படுத்துக் கிடக்குமாம்.

என் அப்பாவிடம் அதைப் பற்றிக் குறிப்பிட்ட ஸ்ரீபகவான் -

''ரங்கா, இந்த நாய் எப்போதும் மாறாத ஒரு சமாதி நிலையில் இருக்கிறது. ஒரு பெரிய மகான் இந்த ரூபத்தில் வந்திருப்பது தெரியாததால், இது ஏன் என் மடியில் எப்போதும் கிடக்கிறது என்று அம்மா கேட்கிறார்...!'' என்று சொன்னாராம்.

ஸ்ரீபகவானின் எதிரிலேயே படுத்து உறங்கும் பெண் நாய் ஒன்று கருவுற்றதும், ஆசிரமவாசிகள் அதை விரட்டிவிட்டார்களாம்.

அந்த நாய் மலையில் எங்கோ சென்று குட்டிகளை ஈன்று பத்திர

மான இடத்தில் வைத்துவிட்டு, அவற்றுக்குப் பால் கொடுத்த பிறகு தினந்தோறும் ஸ்ரீபகவானின் முன்பு படுத்துக் கொள்ளுமாம்.

இதுபோலவே பாம்பு, குரங்கு, ஆடு, மாடு, மயில், அணில், காக்கை என்று எண்ணற்ற ஜீவராசிகள் ஸ்ரீபகவானின் அருளாசியைப் பெற்றிருக்கின்றன.

மிருகங்களை அது, இது என்று கூறாமல், அவன், அவள் என்றே ஸ்ரீபகவான் குறிப்பிட்டு வந்துள்ளார்.

ஸ்ரீஸ்கந்தாசிரமத்தில் இருந்தபோது, பிக்ஷையாகக் கிடைத்த உணவையும், ஸ்ரீஅழகம்மா அம்மாள் சமைத்துப் பரிமாறும் சாப்பாட்டையும் மிருகங்களுடன் ஸ்ரீபகவான் பகிர்ந்து கொள்வாராம்.

என் அப்பாவின் நண்பர் ஒருவர் ஸ்ரீபகவானை தரிசிக்கச் சென்றபொழுது, தனது சாப்பாட்டு இலையை நாய்க்குட்டி ஒன்று முகர்ந்துவிட்டதால், சாப்பிட மறுத்துவிட்டாராம்.

உடனே ஸ்ரீபகவான் அந்த நண்பருக்கு ஸ்ரீதத்தாத்ரேயர் கதையைச் சொல்லி, உணவை ஏற்கச் சொன்னாராம்.

ஸ்ரீபகவானின் திருமேனியில் பாம்புகள் ஏறி விளையாடும் காட்சியை அழகம்மா அம்மாள் பலமுறை பார்த்திருக்கிறார்.

என் அக்காவும், பெற்றோர்களும் ஸ்ரீபகவானை தரிசிக்கச் சென்றபோது ஒரு பாம்பு மெதுவாக அவரது முதுகில் ஏறி தோள்வழியாக இறங்கியதாம். ஸ்ரீபகவான் அதனைத் தமது திருக்கரங்களால் பிடித்து, ''எல்லோரும் பயப்படறா, அப்புறமாக வா, இப்போது சமர்த்தாய் போ!'' என்று கூறி அனுப்பி வைத்தாராம்.

ஸ்ரீபகவானின் ஸ்பரிச தீட்சை பெற அந்தப் பாம்பு எத்தனை புண்ணியம் செய்திருக்க வேண்டும்?

ஸ்ரீபகவானால் நொண்டி என்று செல்லமாகப் பெயரிடப்பட்ட குரங்கு அவரிடம் மிகவும் உரிமையாகப் பழகும்.

ஒருமுறை அக்குரங்கு ஸ்ரீபகவானின் மடியில் அமர்ந்தபடி அவரைத் தழுவிக் கொண்டதும், ஸ்ரீபகவான் அதன் முதுகைத் தடவிக் கொடுக்க, குரங்கு அவரிடம் ஏதோ சொல்வது போல் இருந்ததாம்.

பிறகு ஸ்ரீபகவான் பக்தர்களிடம், தாம் விருபாக்ஷி குகையில் இருக்கும்போதே பிற குரங்குகளால் காயப் படுத்தப்பட்ட அந்த நொண்டிக் குரங்கைக் காப்பாற்றி காயங்களை குணப்படுத்தியதாகவும், சாதாரணமாக மனிதர்களால் பராமரிக்கப்பட்ட ஒரு குரங்கைப் பிற குரங்குகள் தமது கூட்டத்தில் சேர்த்துக் கொள்ளாது என்றும், இருந்தபோதிலும், தாம் அப்போதே நினைத்தபடி அந்த நொண்டிக்குரங்கை இப்போது தங்களது ராஜாவாக இதர குரங்குகள் ஏற்றுக் கொண்டிருப்பதாகவும், அதையே அந்த நொண்டிக்குரங்கு தம்மிடம் சொன்னதாகவும் சொன்னார். பக்தர்களும் மிகவும் அதிசயப்பட்டுப் போனார்கள்.

அணில்களுக்கும், மயில்களுக்கும் ஸ்ரீபகவான் முந்திரிப் பருப்புகளை அளித்து மகிழ்வார்.

என் தந்தையின் சஷ்டியப்தபூர்த்தி 1938 டிசம்பரில் நடந்து முடிந்தவுடன் எங்கள் குடும்பத்தில் அனைவரும் ஸ்ரீபகவானைத் தரிசிக்கச் சென்றோம்.

அப்போது லட்சுமி என்ற பெயருள்ள பசுமாடு, ஸ்ரீபகவானின் முகத்தைப் பார்ப்பதும், மடியில் தலை வைப்பதுமாக இருந்தது.

ஸ்ரீபகவான் மலையில் இருந்தபோது அவருக்குக் கீரை சமைத்துக் கொடுத்த பாட்டியே லட்சுமியாக வந்திருப்பதாக கூறுவர் பலர்.

அந்தப்பசுமாடு ஆசிரமத்திற்கு வருவதும், ஸ்ரீபகவானை அது நமஸ்கரிப்பதும், ஸ்ரீபகவான் அதைத் தடவிக் கொடுத்து, ''என்னம்மா, எப்படி இருக்கே?'' என்று கேட்டு வாழைப்பழம் ஊட்டி விடுவதும் தினசரி நடப்பதாகும்.

அன்றைய தினம் லட்சுமியைக் கூர்ந்து கவனித்த ஸ்ரீபகவான் -

''ஓஹோ, உனக்கு முழு இட்டிலி தராமல், தூள் இட்டிலி கொடுத்துட்டாளா?'' என்று கேட்டுவிட்டு -

''பிச்சை, மௌனிக்கு நான்கு இட்டிலி வெச்சிருக் கேளாமே? அதில் இரண்டைக் கொண்டு வந்து கொடுக்கச் சொல்லு. அவள் பங்கை அவளுக்குக் கொடுத்துடணும்!'' என்று கூறி, இட்டிலியை வரவழைத்து தமது திருக் கரங்களால் அதை ஊட்டிய பின்பே நகர்ந்தது அந்தப் பசுமாடு.

ஸ்ரீபகவானின் அன்னை அழகம்மா அம்மாளின் சமாதிக்குப் பின்புறம் லட்சுமியின் சமாதியைப் பார்க்கலாம். அது முக்தியடைந்த தினம் பற்றி ஸ்ரீபகவானே ஒரு கவிதையாக எழுதி, அதை அந்த சமாதியில் ஒரு கல்லில் பொறிக்கச் செய்துள்ளார்.

தம்முடைய அன்னைக்குக் கொடுத்தது போலவே, லட்சுமி என்ற அந்தப் பசுமாட்டிற்கும் அதன் தலையில் கைவைத்து ஸ்ரீபகவான் மோட்சமளித்தாராம்.

லட்சுமியின் சமாதிக்கு அருகிலேயே ஜாக்கி என்ற நாய், புண்ணிய காக்கை என்ற காகம், வள்ளி என்று அழைக்கப்பட்ட மான் ஆகியவற்றுக்கும் சமாதிகள் அமைந்திருக்கின்றன.

அந்த ஜீவராசிகள் எத்தனை புண்ணியம் செய்தன வோ யாருக்குத் தெரியும், ஸ்ரீபகவானைத் தவிர...!





# 22. திருவடிப்பேறு

சத்தியமங்கலம் வேங்கட ரமணய்யர் என்பவர் ஸ்ரீபகவானைப் போற்றி, ஸ்ரீரமணஸ்துதி பஞ்சகம் என்ற ஸ்தோத்திரத்தை இயற்றினார். அது, ஸ்ரீரமணாஸ்ரமத்தில் சனிக் கிழமைகளில் பாராயணம் செய்யப் படுகிறது. காலைப்பாட்டு, கும்மிப் பாட்டு, பொன்னொளிர் பத்து (பொன்னையொத்த பத்து) போன்ற தமிழ்த்துதிகளையும் இயற்றினார் அந்தப் புலவர்.

ஒருமுறை ஸ்ரீபகவான் சன்னதி யில், 'பொன்னொளிர் பத்து' பாராயணம் செய்யப்பட்டபோது, நான்காவது பாட்டான ''தந்திடாய் தளிர் பொற்பாதம் தமியனேன் சிரத்திற்சூடி நொந்திடா வாழ் வெய்தி நொடியதிற்பவ நோய் போக்க'' என்ற பாடலைப் பாடும் சமயம், ஸ்ரீபகவான், என் தந்தையின் தலையில் தமது திருவடியின் கட்டை விரலால் அழுத்தி இருக்கிறார். குருவானவர் தமது சீடருக்கு இவ்விதம் தீட்சை அளித்து ஞானம்

வழங்கி ஆசிர்வதிப்பது தொன்று தொட்டு வழங்கும் வழக்க மாகும். ஸ்ரீபகவானின் திருவடி தலையில் இருக்கும் வரை அவ்விரு வரிகளையே திரும்பத் திரும்ப பாடினார்களாம்.

ஸ்ரீபகவானின் திருவடி என் தந்தையின் தலையில் வைக்கப்பட்டதைக் கண்ட ராமசாமிப் பிள்ளை என்ற ஸ்ரீபகவானின் பக்தர் ''உமக்குக் கிடைத்த பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லையே...!'' என்று சொல்லிச் சொல்லி உருகிப் போனாராம்.

அதேபோல் முதுகு வலியால் அவஸ்தைப்பட்டு, ஒரு தரம் தமது முன்னிலையேயே மயங்கி விழுந்துவிட்ட என் தாயின் நோயையும் ஸ்ரீபகவான் தீர்த்துவிட்டார்.

அதுமட்டுமல்ல -

''இனிமே செல்லம்மாவுக்கு முதுகுவலி வராது'' என்றும் கூறியிருக்கிறார்.

அதுபோலவே என் தாய் முக்தியடையும் வரையில் அவருக்கு அந்த முதுகுவலி வரவே இல்லை.

திண்டுக்கல்லில் உள்ள ரமணன் அண்ணாவின் வீடு.

1952-ம் வருடம் கார்த்திகை மாதம் ஏகாதசிநாள்.

மாலை நேரம்; வீட்டில் விளக்கேற்றிவிட்டு ஸ்தோத்திரங்களைப் பாராயணம் பண்ணிக் கொண்டிருந்த என் அம்மாவுக்கு திடீரென்று வயிற்றில் சங்கடம்.

கொல்லைப்புறம் போய்விட்டு, ஸ்வாமி பூஜையைத் தொடர்வதற்காக மறுபடியும் குளித்து, மாற்றுடை மாற்றிக் கொண்டிருந்த என் தாயிடம் என் அப்பா, ''என்ன, குளிச்சியா?'' என்று கேட்க -

''ஆமாம், கொஞ்சம் வெளியே இருங்கள், நான் புடவையை மாற்றிக்கொள்ள வேண்டும்!'' என்று சொல்ல, அப்பா வெளியே வந்து அமர்ந்தார்.

சிறிது நேரத்திற்கு உள்ளேயிருந்து அரவம் ஏதும் கேட்காமல் இருக்கவே, அப்பா உள்ளே சென்று பார்த்தால்-

''சற்று முன்புதான் குளித்து முடித்து, மடியாகப் புடவை உடுத்திக் கொண்ட என் அம்மா, சுவாமிசந்நிதியில் ஸ்ரீபகவானை நமஸ்கரித்திருந்த நிலையிலேயே முக்தி அடைந்திருக்கிறார்.

அவர் அடிக்கடி கூறியதுபோல், ஏகாதசி மரணம், துவாதசி தகனம் கிடைத்தது என் அம்மாவுக்கு.

அதேபோல் என் தந்தையும், நான்கு வருடங்கள் கழித்து, 1956-ம் வருடம், என் தயாரின் திதியன்று உணவு உண்டுவிட்டு, மாலையில் ஸ்ரீபகவானின் திருவடியை அடைந்துவிட்டிருக்கிறார்.





# 23. நினைவை விட்டு நீங்காமல்...

ஸ்ரீபகவான் பூரணமான பின்பு தான் என் தாயாரும், தந்தையாரும் முக்தி அடைந்தார்கள்.

ஸ்ரீபகவான் இவ்வுலகை விட்டுச் சென்றது, எங்களுக்கு மட்டுமே இழப்பல்ல. இவ்வுலக மக்கள் அனைவருக்குமே பேரிழப்பு தான்.

ஸ்ரீபகவானின் கையில் புற்று நோய் ஏற்பட்டதைக் கேட்டு நாங்கள் அனைவரும் துடித்துப் போனோம்.

ஸ்ரீபகவானே அந்த நோய் யாருக்கோ வந்தது போல், அனஸ் திஷியா (மயக்க மருந்து) கூட இல்லாமல் அறுவை சிகிச்சை செய்யச் சொன்னார்.

தாம் வேறு சரீரம் வேறு என்று ஸ்ரீபகவான் அடிக்கடி கூறி வந்தாலும், அந்தத் திருவுடல் தரிசனமான வழியாகத்தானே நம் எல்லோர் மனத்தில் ஸ்ரீபகவான் பதிந்திருக்

கிறார். ஸ்ரீபகவானைப் பிரிவதை யார்தான் சகித்துக் கொள்ள முடியும்?

ஸ்ரீபகவானின் உடல்நிலை மிகவும் மோசமடைந்ததைக் கேள்வியுற்று, என் அம்மா அவரைச் சென்று தரிசித்தார். பின்னர் பிரிய மனமில்லாமல், கனத்த இதயமும், கண்ணீர் பெருகும் கண்களுமாகப் பிரியா விடை பெற்று இரயில் நிலையம் வந்தடைந்தார்.

அப்போது, ஒரு ஜோதிப்பிழம்பு தோன்றி விண்ணில் மறைந்ததைக் கண்டிருக்கிறார். இதற்குமுன் கண்டிராத ஓர் அதிசயக் காட்சி அது.

ஸ்ரீபகவான் தமது மனித சரீரத்தை உதறிவிட்டார்.

ஆனால் -

தகவல் தொடர்பு, செய்தி சாதனங்கள் இப்போது போல் பெருகியிருக்காத அந்த நாளில் -

மறுநாள் மதுரை வந்து சேர்ந்த பிறகுதான் என் அம்மா செய்தித்தாள் மற்றும் வானொலியின் மூலமாக ஸ்ரீபகவான் தமது பூதவுடலை நீத்த செய்தியை அறிந்து கொண்டார்.

பேசும் தெய்வமாக, வாழ்வின் வழிகாட்டியாக, கருணை மழை பொழியும் கார்மேகமாக, எல்லாவற்றுக்கும் மேலாக, எங்களின் அன்புத் தந்தைக்கு ஆத்மார்த்த சிநேகிதராக விளங்கிய பகவான் ஸ்ரீரமணரை நினைக்காத நாளில்லை.

அவரது பாடல்களைப் பாடாத நேரமில்லை.

எங்கள் கண்ணெதிரே ஸ்ரீபகவான் எப்போதும் அமர்ந்திருப்பதுபோலவேதான் தோன்றுகிறது.

அவரது பூதவுடல் மறைந்த பின்பும் பலருடன் கனவுகளில் பேசுவதாகவும், கிரிவலப் பாதையில் அவரைச் சிலர் தரிசித்ததாகவும் கேட்கும்போதெல்லாம் மெய்சிலிர்க்கும். இப்படிப்பட்ட ஈசுவர அவதாரமாகிய தெய்வமகா புருஷரின் சிநேகிதராக விளங்கிய என் தகப்பனாருக்கு மகளாக நான் பிறந்தது மிகப்பெரிய புண்ணியத்தின் விளைவே.

ஸ்ரீபகவானின் காலத்திற்குப் பிறகு, அவரது அனுக்கிரகம் நிறைந்திருக்கும் ஒரு திருக்கோயிலாகவே ஸ்ரீரமணாஸ்ரமம் விளங்கி வருகிறது.

ஆசிரமத்தில் தங்குவதற்கோ, சாப்பிடுவதற்கோ எந்தக் கட்டணமும் வசூலிக்கப்படுவதில்லை.

கடிதம் மூலமோ, ஈமெயில் வழியாகவோ முன் பதிவு செய்து கொள்பவர்களுக்குத் தங்கும் வசதி செய்துதரப்படுகிறது.

ஸ்ரீரமணாஸ்ரமம் பக்தர்கள் என்னும் பறவை களுக்குத் தஞ்சமளிக்கும் பெரிய ஆலமரமாக இன்று வளர்ந்து விசுவரூபம் எடுத்துள்ளது. இதனைத் திறம்பட நிர்வகிப்பவர்களை எத்தனை பாராட்டினாலும் தகும்.

ஸ்ரீரமணாஸ்ரமத்தின் மூலம் நடைபெறும் அன்ன தானங்களில் பங்குபெறுவதன் மூலம் ஆயிரம் மடங்கு புண்ணிய பலன்களைப் பெறுவோம் என்பதில் சந்தேகமில்லை.

இறுதியாக, இன்னொரு அதிசயத்தைச் சொல்லி முடிக்கலாம் என்று நினைக்கிறேன்.

ஸ்ரீபகவானின் ஜெயந்தியை முன்னிட்டு கூடிய கூட்டத்துக்கு உணவளிக்க உக்கிராணத்தில் உள்ள

பொருள்கள் போதவில்லை. நிரஞ்ஜனானந்தர் இதனை ஸ்ரீபகவானிடம் விண்ணப்பிக்க -

''கவலைப்படாதே!'' என்றாராம் பகவான்.

அன்றிரவு சென்னை பக்தர் ஒருவர் அனுப்பியதாக லாரி நிறைய சாமான்கள் வந்து இறங்கியது.

பின்னர் ஒரு முறை அந்த பக்தர் ஸ்ரீரமணாஸ்ரமம் வந்தபோது நிரஞ்ஜனானந்தர் அவருக்கு நன்றி தெரிவிக்க, அவரோ நான் அனுப்பவில்லையே என்று சொல்லி விட்டாராம்.

அதன் பிறகு அவர் ஆஸ்ரமத்திற்குப் பொருள்கள் அனுப்பி வைக்கத்தான் செய்கிறார். ஆனால் -

அன்றைய தினம் இரவில் லாரியில் வந்த பொருள்களை அனுப்பியவர் யார் என்பது யாருக்கும் புரியாத, ஸ்ரீபகவானுக்கு மட்டுமே புரிந்த விஷயமாகும்.

''நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின் கொட்பின்றி
ஒல்லும் வாய் ஊன்றும் நிலை''

என்று திருவள்ளுவர் உரைத்ததற்கு ஏற்ப, என் தகப்பனாருக்கு மட்டுமின்றி, இவ்வுலக மக்கள் அனைவருக்கும் கைகொடுக்கும் சினேகிதராக விளங்கிய ஸ்ரீரமண பகவானின் திருவடிக்கு என்றென்றும் நமஸ்காரங்கள்.

''ஓம் நமோ பகவதே ஸ்ரீரமணாய''



